ஓம்

ஸ்ரீ ராமகிருஷ்ணாய நமஃ

# ஸ்ரீ ஸ்வாமி விவேகாநந்தர்

அருளிச்செய்த

# பக்தி யோகம்.

இஃது

ப்ரஹ்மஸ்ரீ ஆர். நாராயணஸ்வாமி ஐயா

இயற்றியது.

பதிப்பாசிரியர்:—

சை. பாலசுந்தரம், தலைவர்

(மஹான் சை. இரத்தின செட்டியார் பௌத்திரன்)

ஸ்ரீ சாது இரத்தின சற்குரு புத்தகசாலை,

நெ. 4/34, நயினியப்ப நாயக்கன் வீதி,

பார்க் டவுன் (P. O.), சென்னை.

1926

ஓம்

# பக்தியோகத்தின் விஷய அட்டவணை

ஓம

# முகவுரை



உலகமெங்கும் வேதாந்த மதத்தைப் பரவச்செய்து மற்றவரால் முடிக்க முடியாத காரியத்தைத் தாமே துவக்கிச் சில வருஷங்களில் பல நூற்றாண்டுகளில் செய்து முடிக்க வேண்டிய வேலையைச் செய்து முடித்த தேசபக்த உத்தமரான ஸ்ரீ ஸ்வாமி விவேகாநந்தரது அமுத மொழிகள் காதுக்குக் கேட்கக் கேட்கத் தெவிட்டாது என்று சொல்லவும் வேண்டுமோ? இப்படிப்பட்ட மகா புருஷனுடைய வாக்குகளில் பல அச்சிற்கே வாராமற் போயின, 'இனியும் வரமாட்டா' என்று கேட்கும்போது மெய்யன்பு கொண்டவர்கள் பெருந்துக்கமடைகிறார்கள். ஆனால், கிடைத்திருக்கும் வரையில் ஸ்வாமிகளின் சரித்திரமும் அவரது அமுதமொழிகளும் அவரது வாழ்க்கைப்பயன் இவ்வளவென்று நமக்குப் போதிக்கப் போதுமானவைகளே. ஆனால், கிடைத்தவரையில் உள்ள உபந்யாசங்களும் பலவித பதிப்புக்களில் வித்தியாசங்களை அடைந்துவந்திருப்பது வருந்தத்தக்கதாகும். ஆங்கில நண்பராகிய குட்வின் என்ற ஒரு சிறந்த விவேகாநந்த பக்தர் ஸ்வாமிகளின் அமுதமொழிகளைக் கூடிய வரையில் வெளியிட்டதற்கு உலக முழுமையும் அவருக்கு நன்றி பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறது.

நிற்க, இப்போது நாம எழுதியுள்ள பக்தியோக உபந்யாசங்களை ஸ்வாமிகள் பெரும்பாலும் அமெரிகாவில் செய்து வந்தார். மற்றும் சில, ஸ்வாமிகளால் எழுதப்பட்ட வியாசங்களாகும். இவற்றைக் கூடியவரையில் கருத்துக் கெடாத

படி தமிழில் மொழி பெயர்த்திருக்கிறோம். வாசகங்களும் கருத்தும ஸ்வாமிகளுடைய மொழிகளில் அடங்கியவை யென்று நிச்சயமாக நம்பலாம்.

விவேகாநந்த ஸ்வாமிகள் அத்வைத மதத்தையே மிக உன்னதமான தத்துவமென்று கருதுகிறவர் என்பது பிரசித்தம். அத்வைத தத்துவத்தை யனுசரிப்பவர் ஞான யோகிக ளாவார். இவ்வித நிலையிலிருப்பவர் பக்தியே பிரதானமாகத் தம் வாழ்க்கையைக்கழித்த பரமஹம்ஸ ஸ்ரீ ராம கிருஷ்ண தேவரிடம் எவ்வாறு பிரதம சிஷ்யரானாரென் பது பலருக்கு ஆச்சர்யமாகும். இந்த ஆச்சர்ய விஷயம் ஸ்வாமிகளது வாழ்க்கையை அறிய முயற்சி செய்பவர்களுக் குச் சிறிது தெளிவாகத் தெரியவரும். ஞானயோக பாகங் களை விஸ்தாரமான பிரசங்களால் விளக்கிக் காட்டிய ஸ்வாமி கள் பக்தியோகத்தைப்பற்றியும பலர் வேண்டுகோளுக் கிணங்கிச் சில உபந்யாசங்கள் செய்தார். ஸ்வாமிகளின் பக்தியோக உபந்யாசங்களிலும் அத்வைத உண்மையே சிறந்து விளங்குவது கவனிக்கத்தக்க விஷயம. "கடவுளின் சாட்சாத்காரம், நீயும் நானும் ஏகம், ஏகமேவப்ரஹ்மம், நானென்ற தனிப்பட்ட வஸ்து கிடையாது என்ற உண்மை களை அனுபவத்திற்குக் கொண்டுவருவதற்குப் பல மார்க் கங்கள் உண்டு" என்றும், "அவற்றுள் பக்தியும் ஒன்று" என் றும ஸ்வாமிகள் தெரிவித்துக்கொண்டு வருகிறார். இதே உண்மை அவரது எல்லா உபந்யாசங்களிலும் உட்பொரு ளாகக் காணப்படுகிறது. பக்தனது மனோபாவனையில் கட வுள் வேறு, தான் வேறு என்று தோன்றுகிறதே இல்லை. தன்னைப்பற்றிய எண்ணமே பக்தனுக்கு மறைந்துபோகி றது. எங்கும் அவனே; என்னுள்ளும் அவனே என்பது பக்தனது மதம்.

எங்கும் உள்ள பிரம்மன் நானே. ஆத்மசொரூப சகலமும் என்று அனுபவிப்பது ஞானமார்க்கத்தை அப்பியசிப்பவனது மதம. சொல்பேதமே யன்றி வஸ்துபேத மில்லை. இதைத்தான் ஸ்ரீ விவேகாநந்த ஸ்வாமிகள் வெகு அழகாக, சொற்சாதுரியமும் பொருட்சுவையும நிறைத்து விளக்கி வருகிறார். மேலும் பக்தியோகத்தைப்பற்றி எடுக்கும்போது அன்பின் முதிர்ச்சியே பக்தி என்ற கருத்தை மறக்கலாகாது. சாமான்ய உலக விஷயங்களில் காதல் என்று சொல்லப்படுவது எதுவோ அதுவே எல்லையில்லாமல் விரிவடைந்து செல்லும்போது அன்பு என்று ரூபநதாங்கி முடிவில் பக்தியாகிறது. மேனாட்டவர்களுக்குத் தெளிவாகத் தெரியப்படுத்தவேண்டியதற்காக ஸ்வாமிகள் இந்தப் பலபடிகளுக்கும் பொதுவாக அவர்களுக்கு விளங்ககக்கூடிய பாஷையில் அன்பு என்ற ஒரு பதத்தையே பிரயோகம் செய்து வருகிறார். சாமான்ய ஜனங்களால் உபயோகிக்கப்படும் அன்பு என்ற மொழியை எடுத்துககொண்டு இதன் பொருளிலிருந்து உலகப்பற்று சம்பநததை யெல்லாம படிப்படியாகப் போக்கி, முடிவில் பரிசுததமாகச் செய்யும்போது பகதி வேறு அன்பு வேறு என்று கேட்போர்களும் நினைக்க முடியாது. இவ்வித பெருமை இநத பக்தியோக உபந்யாசங்களில் வெளியாவதை எவரும் காணலாம.

R. நாராயணஸ்வாமி ஐயர்.



முடியாது. ஏனெனில், உலக சம்பந்தமான இச்சைகள் உள்ளவரையில், அந்த அன்பு உண்டாகிறதில்லை. "பக்தியானது கர்மா, யோகம இவற்றைவிட உயர்ந்தது. ஏனெனில், கர்மாவும் யோகமும் ஒரு லட்சியத்தை யடையச் செய்யப்படுகின்றன. பக்தியோ லட்சியமெதையும் கொள்ளாமல் தானே மார்க்கமும லட்சியமுமாக அமைந்து நிற்கிறது."

நமது முனிவர்க ளெல்லோரும இடைவிடாமல் புகழ்ந்துவந்தது பக்தியொன்றே. சாண்டிலியர் நாரதர் முதலியவர்கள் பக்தியைப்பற்றி விசேஷமாகத் தனியே நூல்களைச் செய்திருக்கிறார்கள். வியாச சூத்திரங்களின் சிறந்த பாஷ்யகாரரும் ஞானபாகத்தையே பிரதானமாகக் கூறவந்தபோதிலும் அன்பு என்ற பக்தியைப் பற்றிபெரிதும் குறித்துக் காட்டியிருக்கின்றார். சூத்திரங்களில பெரும்பாலும ஏதோ ஒருவித வரண்ட அறிவையே கொடுக்கின்றது என்று தோன்றுமாறு பாஷ்யகாரர் அவற்றைத்தெரிவிக்கவிரும்பினாலும் தெய்வவணக்கத்தைப்பற்றிய அத்தியாயமானது அவ்வளவு இலகுவாக இவருக்கு இணங்கிவிடவில்லை.

ஞானம் என்னும் அறிவிற்கும் அன்பு என்ற பக்திக்கும் ஏதோ வித்தியாசம் பெரிதாக இருக்கிறதென்று நினைக்கிறார்கள். உண்மையில் அவ்வளவு வித்தியாசமில்லை; போகப்போக அவை யிரண்டும ஒரே இடத்தில் வந்து முடிவுபெறுவதை நாம் காண முடியும். ராஜயோகமும்கூட முக்தியடைவதற்காக அனுஷ்டிக்கப்படும்போது இதே முடிவைத்தான் வந்து சேருகிறது. இப்போது ராஜயோகம அநேகமாகப் பாமர ஜனங்களை ஏமாற்றும எண்ணத்துடன அனுசரிக்கப் படுகிறது. இப்படிக்கின்றி முக்தி சாதனமாக அதை உபயோகித்தால் முடிவு ஒன்றுதான்.

பக்தியினால் ஒரு பெரிய நன்மை யுண்டு. நாம கொண்டுள்ள திவ்ய லட்சியத்தை யடைவதற்கு மிக இலகுவான வழியாக பக்தி அமையும. ஆனால், பக்தியினால் ஒரு பெரிய தீமையும உண்டு. கீழ்ப்படிகளில் பக்தியானது மிகக இழிவு

பொருந்திய மதவெறியாக மாறக்கூடும். ஹிந்து மதம், முகம்மதிய மதம், கிறிஸ்தவ மதம முதலிய மதங்களில மத வெறி கொண்டவர்க ளுண்டு; இவர்களெல்லோரும் பகதி நிலையில் கீழ்ப்படிகளிலிருந்து ஒன்று சேர்நத கூட்டத் தவரேயாவர். அன்பு செலுத்தப்பட்ட விஷயத்தினிடம ஒரேவிதமான பறறு கொள்வதாகிய நிஷ்டை யென்பது அன்பு வளர்வதறகு அவசியம வேண்டும். ஆனல், அதே பற்றுதல இதர விஷயஙகளைக குறைகூறுவதற்குக காரண மாகவும் உபயோகமாகிவிடுகிறது. அபிவிர்த்தி யடையாத பலவீன மனஙகொண்டவர்கள் ஒவ்வொரு மதத்திலும ஒவ் வொரு தேசத்திலும் இருககிறார்கள். இவர்கள் இதர மதஸ் தாகளுடைய அலலது தேசத்தவர்களுடைய லட்சியங்க ளைக் குறை கூறுவதன் மூலமாகவே தம லட்சியப்பொரு ளைப் போற்றுகின்றார்கள். தம் லட்சியப்பொருளிடம் பக்தி யைச் செலுததுவதற்கு வேறு மார்க்கம இவர்களுக்குத் தெரியவில்லை. இதனாலேயே சில விநோத புருஷர்களைக் காண்கிறோம. கடவுளைப்பற்றித் தாம கொண்டுள்ள கொள் கையினிடம மிகுந்த பற்றுக்கொண்ட ஒருவன், தன் மதத்தி னிடம் அளவு கடந்த பக்தி செலுத்தும் ஒருவன், பிற மதஸ்தர்களைக் கண்டால் வெறி பிடித்தவனாகி அவர்க ளுடைய லட்சியங்களைக குறை கூறுகிறான். தன் எஜமானது சொத்தைப் பிறர் அபகரிககவிடாமல காககின்ற நாயின் அறிவுபோன்றது இவர்களுடைய அறிவு என்று சொல்ல வும முடியவில்லை மனிதனுடைய அறிவைவிட இவ் விஷ யத்தில் நாயின் அறிவு ஒரு விததததில் திறமானதாயிருக் கிறது எஜமானன் எநத உடை தரிததபோதிலும, அவனை 'வேறு மனிதன்' என்று நாய் ஏமாறுவதே கிடையாது. மத வெறி கொண்டவனே நிதானம தவறியவனாகிறான். ஒருவன் சொல்லும விஷயம சரியா, தவறா என்று கூடக் கவனியா மல் 'சொலலுகிற மனிதன் யார்' என்று கவனிக்கிறான். ஒரு விஷயம உற்பததியாகும இடததிலே கருத்தைச செலுத் தியே மதிமயஙகி அவ் விஷயததின் நேர்மையைப்பற்றியும் கவனிப்பதில்லை. தன் கொள்கைகளைப் பின்பற்றுகிறவரிடம

மிக அன்பு செலுத்திப் பிரியததுடன் நடந்துகொள்கிறவன் வேறு மதஸ்தர்களிடம் பழக நேரும்போது மிகக் கொடிய செயல்களைச் செய்யப் பின்வாங்குகிறதில்லை.

ஆனல், இவ்வித ஆபத்து ஆரம்ப நிலையைச் சேர்ந்த கௌண பக்தியிலேதான் உண்டு. பகதி முதிர்ந்து பரா பக்தி நிலைககு எழுமபிவிட்டால் அங்கே இவ்வித வெறி கொண்ட கொடிய தோற்றங்கள் கிடையா. ஏனெனின், பக்தியின் உயர்நத நிலையில் முழுகியிருபபவன் அன்பின் சொருபமாகிய கடவுளுககுச் சமீபததிலேயே நெருங்கி யிருப்பதால் அவனிடம் துவேஷங்கொண்ட மனம் இருக்க இடமில்லாமற் போகிறது.

இந்த வாழ்ககையில் நம் குணங்களை யெல்லாம அழகு பெற ஒழுங்குபடுததிக்கொள்ளும் பாக்கியம் நமமெல்லோ ருக்கும கிட்டுவதில்லை. ஆனல், ஒரு விஷயம் நாமெல்லோ ரும் அறிவோம. சித் - அன்பு - யோகம் ஆகிய மூன்றும் எவரிடம் ஒழுங்குபெறச் சேர்க்கப்பட்டிருக்கின்றனவோ அவர் மிகச் சிறநத பெரியாராவர். பறககின்ற பறவைக்கு இரண்டு இரககைகளும, சுக்கான் செலுததுவதுபோல் செலுதத ஒரு வாலும் வேண்டும். ஞானம என்ற அறிவும் பக்தி என்ற அன்பும் இரண்டு இரக்கைகளுககுச் சமம். செல்லும்போது ஒழுங்கு தவருமல் காபபது யோகம என்ற வால். இநத மூன்று வழிகளிலும் ஒழுங்காகக் கட வுள் வழிபாடு செய்யச் சக்தியற்றவர்களுககு பக்தி யொன்றே வழியாகும். இவர்களுக்கு ஆரம்பததில் சில கொள்கைகளும கிரியைகளும் அவசியமேயாகும. ஆனல், கடவுளிடம் ஆழ்நத அன்பைச் செலுத்தும் உன்னத நிலை க்கு நம்மை எழுப்பககூடிய சாதனங்களாக மாததிரமே அவை இருக்கின்றன என்பதை யறியவேண்டும்.

ஞானத்தையே போதிககும் ஆசாரியர்களுக்கும் பக்தி யே பிரதானமென்று சொல்கிறவர்களுக்கும் சிறிது வித்தி யாசமுண்டு. "முகதிககு வழிகாட்டியாக பகதி உபயோகப் படுகிறது" என்று ஞானிகள் சொல்கின்றனர்கள். "பக்தர்க

ஞுக்கு அன்பின் பெருக்கமாகிய பக்தியே சாதனம் சாத்திய மென்ற இரண்டுமாகும்." இந்த இரண்டுவித உபதேசங்களி லும் வித்தியாச மில்லையென்றே நான் நினைக்கின்றேன். உண்மையில் பக்தியை சாதனமாத்திரமே யென்று சொல் லும்போது கீழ்நிலையிலுள்ள தெய்வ வணக்கம் அல்லது பக்தியை அது குறிக்கிறது. ஞானிகளும் பக்தர்களும் ஒரு விஷயத்தை மறந்துவிடுகின்றார்கள்; அதனால் இவ்வித வித்தி யாசங்கள் தோன்றுகின்றன. பரிபூர்ண பக்தி உண்டாகி விட்டால் உண்மையான ஞானம் வந்தே தீரும். அதைத் தேடவேண்டிய அவசியமில்லை. அதேமாதிரி பூர்ண ஞானத்தி னின்று உண்மையான பக்தியைப் பிரிக்க முடியாது. இவ் விஷயங்களை மனதில் கொண்டு வேதாந்த பாஷ்யகாரர் இதைப்பற்றி என்ன சொல்கிறார்களோ கவனிப்போம்.

"ஆவ்ருத்திரஸக்ருதுபதேசாத்" "இடைவிடாமல் தியா னம் செய்வதே சாஸ்திரங்களின் கட்டளை." இந்த ஸூத்தி ரத்திற்கு வியாக்கியானம் செய்யும்போது பகவான் ஸ்ரீ சங் கரர் சொல்கின்றார்:—"ஜனங்கள் 'அரசனிடத்தில் அன்பு செலுத்தி விசுவாசம் பாராட்டுகிறான். குருவினிடம் பக்தி யுள்ளவனாகிறான்' என்கிறார்கள். அரசனை வழிபற்றி நிற்பவ ரையும், குருவின் கட்டளைப்படி நிற்பவரையும் பார்த்து இவ்வாறு சொல்கிறார்கள். இவ்விதம் பின்பற்றுவதையே தம் கடனாகக் கொள்ளவேண்டும். அப்போதுதான் ஜனங்கள் அவ்வாறு சொல்வார்கள். அதுபோலவே, 'அன்பு மிக்க மனைவி தன்னைப் பிரிந்துபோயிருக்கும் புருஷனைப்பற்றித் தியானம் செய்கிறாள்' என்கின்றார்கள். இந்தப் பாவனைகளி லெல்லாம் ஆவல் மிகுந்து இடைவிடாமல் தியானிக்கும் தன்மை விளங்குகிறது." ஸ்ரீ சங்கரர் சொல்கிறபடி இதுவே பக்தி.

தியானிக்கப்படும் விஷயத்தினிடம் இடைவிடாமல், ஒரு பாத்திரத்திலிருந்து மற்றொரு பாத்திரத்தில் ஊற்றப் படும் எண்ணெய் ஒரே தாரையாக விழுவதுபோல, ஞாபக சக்தி நிலைத்திருப்பதே தியானம். இவ்வித தியானம் கடவுள்

விஷயத்தில் நிலைத்துவிட்டால் பநதமெல்லாம் தெறித்து விடுகிறது. அதனால்தான் "இடைவிடாத ஞாபகம், அல்லது தியானம முக்திககுச் சாதனம்" என்று சாஸ்திரங்கள் தெரி விககின்றன. இவவித தியானமும் கடவுளை காண்பதும் ஒன்றே. "நமக்கு அதிக தூரததிலே உள்ளவனுகவும் அதிக சமீபததிலே உள்ளவனுகவும இருப்பவன் எவனே அவனைக கண்டவுடன் ஹிருதய பந்தங்கள் தெறிததுச்,சநதேகஙகள் ஒழிநது, கர்ம பயன்கள் இல்லாமற போகின்றன." இவ வாககியத்தின் பொருளைக் கவனியுஙகள. சமீபததில் உள்ளவ னைக காண முடியும. தூரததில் இருப்பவனை மனதால் நினைக்கத்தான் முடியும். ஆனால, சாஸ்திரங்கள் "எட்டியிருப் பவனையும் காண்பவன் விடுதலை யடைவான" என்கின்றன. ஆதலால், தியானமும காண்பதும் ஒன்று" என்று சாஸ்திரங கள் நமக்குப் போதிககின்றன. தியானததையே பலப்படுத் திககொண்டால் காண்பதறகுச சமமாக எழுகின்றது. "இடைவிடாததியானமே தெய்வவணககம" என்று நூல்கள் கூறுகின்றன. இடைவிடாத வணக்கமே அறிவு. ஆதலால, அறிவு என்னும ஞானமும் இடைவிடாத தியானமே யல லவா? ஆதலால், ஞாபகசக்தியானது இடைவிடாமல் இரு ந்துகொண்டு வரவரத் தடிதது நேரில் காண்பதற்குச சம மாகப் பூர்த்தியானவுடன் முகதிக்குச் சாதன மாகின்றது என நூல்கள் போதிககின்றன.

ஆத்மாவைப் பலவகைக கலைகளின் மூலமாக அடைய முடியாது; புத்தியாராய்சசியினுலும், வேதங்களைப் படிப்பத னுலும்கூட அடைய முடியாது. இந்த ஆத்மன் எவனை இசசிக்கிறதோ அவரே ஆத்மாவை யடைய முடியும். அப்ப டிப்பட்டவருக்கு ஆத்ம தரிசனம் எறபடுகிறது. கேட்பது, நினைப்பது, தியானிப்பது முதலியவைகள் ஆத்மாவை யடைவதற்குச் சாதனங்க ளல்லவென்று சொல்லிய பின 'இந்த ஆத்மன எவனை இச்சிக்கிறதோ அவரே ஆதமதரி சன மடைய முடியும்' என்று சொல்லபபடுகிறது. அதிதீவிர மான அன்பு செலுததுகிறவர் மாத்திரமே இச்சிககப்படு

கிறார்கள். இவ்வித பக்தன் ஆத்மதரிசனம் அடைவதற்குக் கடவுளே உதவி செய்கிறார். ஏனெனில், 'என்னிடம் இடைவிடாத பற்றுகொண்டு என்னிடம் பக்தி செலுத்துகிறவருடைய மனதில் நான் புகுந்து அவர்கள் என்னை நோக்கி வருமாறு செய்துவிடுவேன்.' என்று பகவான் கூறியிருக்கிறார். ஆதலால், நமக்கு விளங்குவது என்ன ? ஒருவனுக்கு இந்த இடைவிடாத பக்தி அல்லது தியானம் முதிர்ந்து நேரில் காண்பதற்குச் சமமாக எழும்பிவிட்டால், அவ்வித தியானம் செலுத்தப்பட்ட ஒப்பற்ற பொருளால் இச்சிக்கப்பட்டு அவன் அந்த வஸ்து தரிசனமடைகிறான். இவ்வளவு வரையில் பகவான் ஸ்ரீராமாநுஜர் மேலே சொல்லப்பட்ட சூத்திரத்திற்குக் கூறும் பொருள்.

"பரம்பொருள் வணக்கத்தினாலாவது" என்ற ஸ்ரீபதஞ்சலி சூத்திரத்திற்குப் போஜன் பின்வருமாறு பொருள் கூறுகிறான்:—"இந்திரிய சுகங்கள் போன்ற பயன்களில் இச்சைகளை யொழித்து, சகல கர்மாக்களையும் ஆசார்யர்களுக்கெல்லாம் ஆசாரியராக விளங்குகிறவரிடம் ஒப்புவிப்பது ஒருவித பக்தியாகும். இதற்கே ப்ரணிதானம் என்று பெயர்."

இதே சூத்திரத்திற்கு ஸ்ரீ வியாசபகவான் பொருள் கூறும்போது, "பரம்பொருளாகிய கடவுளின் கருணை யோகிக்குக் கிடைத்து அவன் இச்சிப்பதைக் கொடுத்துதவுவது எதன் மூலமாகவோ அதுவே ப்ரணித்தானம்" என்கிறார்.

"கடவுளிடம் ஆழ்ந்த அன்பு செலுத்துவதே பக்தி" என்று சாண்டில்யர் கூறுகிறார்.

பக்தர்களுக்கெல்லாம் அரசனாக விளங்கும் பிரஹலாதன் என்ன கூறுகிறான் பார்ப்போம்:—"அஞ்ஞானிகள் மாயா சொரூபமான இந்திரிய விஷயங்களிடம் செலுத்துகின்ற அழிவில்லாத அன்பு, நான் உன்னை தியானிக்கும்போது, அவ்வித ஆழ்ந்த அன்பு என் ஹிருதயத்தை விட்டு நழுவாமலிருக்கட்டும். பரம்பொருளாகிய ஈஸ்வரனிடம்

செலுத்தப்படும் அன்பு நழுவாமலி ருக்கட்டும்" என்பதே யாம.

அப்பொருளைத தவிர வேறு எவ்வளவு உன்னத வஸ்துவினிடமுமம செலுத்தபபடுவது பக்தியாகாது.

ஒரு பெரிய ஆசாரியர் கூறியிருப்பதாக ஸ்ரீராமாநுஜர் தமது ஸ்ரீபாஷ்யததில் எடுத்துக் கூறியிருப்பது கவனிக்கத் தககது:—"பிரம்மாமுதல் புற்கள்வரையில உள்ள வஸ்துககளெல்லாம ஜனன மரணங்களுககுக் கட்டுப்பட்டவை. கர்மாவினுல ஏறபடும ஜனன மரண பநதங்கள் எல்லாவற்றிற்குமுண்டு. அஞ்ஞானமயமாகிய அவ் வஸ்துக்கள் மாறுந் தன்மையனவாதலால், தியானிககப்படும வஸ்துவாக அவற்றில் எதுவும ஏற்படாது."

சாண்டில்யர் உபயோகிதத அநுரக்தி என்றபதத்திற்கு வியாககியானம செய்யும்போது ஸ்வப்னேஸ்வரர் அநு என்ருல் பிறகு என்றும, ரக்தி என்ருல் பற்று என்றும பொருள் கூறி, "கடவுளின் சொரூபத்தையும் பெருமையையும் அறிநத பினனர் ஏறபடும பறறு" எனகிருர். இப்படியில்லாவிட்டால் மனைவியிடமும் குழநதைகளிடமும் ஏற்படுகிற குருட்டுத்தனமான பறறுககூட பகதியாகிவிடும. இநதப் பற்றுகளையெலலாம் பகதியென்று சொலவது வழக்க மில்லை.

இப்போது பகதியின் நிலைமையை நன்ருக அறிந்து கொண்டோம. சாதாரணமான கடவுள் வழிபாட்டில் ஆரம்பம் செய்து ஈச்வரனிடம உன்னதமான ஆழ்ந்த அன்பு அல்லது பகதியைச் செலுததும் நிலைவரையில் படிப்படியாகத் தர்மானுபவம முதிர்சசி யடைவதற்குச சாதனமாக இருககும் இடைவிடாத மனோமுயறசியே பக்தியாம.



## இரண்டாவது அதிகாரம்

# ஈசுவரன் யார்?

இந்த ஜகத்தின் உற்பத்தி இருப்பு பிரிவு முதலிய வை எவரிடம தோன்றுகின்றனவோ அவரே கடவுள்" என்று வேதாந்த சூத்திரம் சொல்கின்றது. அவரே ஈச்வரன்; நிதய முக்தரும பரிசுத்தருமானவர் அவரே; சர்வ சகதிமா னுகவும சர்வஞ்ஞராகவும சர்வ தயாளுவாகவும உள்ள வர், ஆசாரியர்களுககெல்லாம ஆசாரியரா யுள்ளவர் அவரே. சுயமஜோதியுடனும் அநிர்வசனீயமான ப்ரேமையுடனும் இருப்பவர் அவரே.

மேலே சொல்லப்பட்ட லட்சணங்களெல்லாம் சகுண ப்ரஹ்மததையே குறிக்கும. அப்படியானுல் இரண்டு கட வுள் உண்டா என்ற கேள்வி பிறககின்றது. இது அல்ல, இது அல்ல' என்று சொல்லிககொண்டே எஞ்சிய சத்-சித்-ஆநந்த சொரூப மொன்று தததுவசாஸ்திரிககும கருணை நிதியாகிய கடவுள் ஒருவர் பகதனுககும என வெவ்வேருக உண்டோ? இல்லை. சத்-சித்-ஆநந்த சொரூபமே கருணை நிதியாகிய கடவுளும ; சகுணமும நிர்ககுணமும ஒனறே. வஸ்துவில் பேத மில்லை. பகதன வணங்குகிற சகுண சொரூபி ப்ரஹ்மத்தை விட வேறுபட்டதென்று பாவிக்க லாகாது. எல்லாம் ப்ரஹ்மமே ; இரண்டற்ற ஏகவஸ்துவே. எங்கும நிறைந்த ஏக சொரூபியாகிய பிரம்மம் மிகமிக சூட்சுமமாக இருப்பதால் அதனிடம் அன்பு செலுத்தி அதை வணஙகுவது முடியாது. ப்ரஹ்மம விஷயமாகவும் லட்சியமாகவும் வந்துவிடாது. ஆதலால், அதே ப்ரஹ்மத் தின் விஷயசொரூபமாகிய ஈசுவரன் அல்லது பரபுருஷனை பக்தன் தேர்ந்தெடுத்துக்கொள்கின்ருன்.

பிரம்மன் என்ற மண்ணிலிருந்து நாநாவித வஸ்துக்கள் செய்யப்படுகின்றன. எல்லாம் ஒரே மண் ரூபமாக இருந்தா லும் நாம ரூபங்கள் வெவ்வேருகின்றன. எந்த வஸ்து வும் உருப்பெறுமுன்னர் அந்த மண்ணினிடம் அந்தர்க்கத

மாக இருந்தது. நாநாவாக விளங்கும் பேத சொரூபங்க ளிடம் வஸ்துபேத மில்லை. உருவங்க ளளவில் அவை வெவ்வேறு பொருள்களேயாம. மண் எலியும மண் யானையும ஒன்றல்ல. ஏனெனில், தோன்றுகிற ரூபங்கள் மாத்திரமே அப்போது அறிவிற்கு விஷயங்க ளாகின்றன. இதேமாதிரி எங்கும நிறைந்த சத் வஸ்துவின் தோற்றங்க ளுள் மிக உன்னதமான தோறறம ஈச்வரன். மானிடன் தன் மனத்தால் ப்ரஹ்மததை யறியமுயற்சி செய்யும்போது மிக்க உன்னதமான பாவனை ஈச்வரன். சிருஷ்டி நித்யமாக உள்ளது. அதுபோலவே (உன்னதமான பரம்பொருளா கிய) ஈச்வரனும் நிதயன்.

வியாச சூததிரங்களின் நான்காவது அததியாயம் நான்காவது பாதத்தில்,மோட்சமடைநத பின்னர் அவ்வாறு விடுபட்ட ஆத்மாவினிடம அளவில்லாத சகதியும் ஞானமும் வநது சோகின்றன' என்று கூறிவிட்டுப், பிறகு உடனே, 'ஆனால்' ஜகத்தின் சிருஷ்டி, ஸ்திதி, அழிவு முதலிய காரியங் களுக்கு வேண்டிய அதிகாரம் கடவுள் ஒருவருக்கே சொந் தம்' என்று வியாசா தெரிவிககின்றார். கீழ்ப்பட்ட நிலையி லுள்ள ஜீவாத்மா ஒருபோதும கடவுளுககுச் சமமாகப் பரி பூர்ண சகதியும் சுதநதிரமும் அடைய முடியாது" என்று துவைத மத பாஷ்யகாரர் கூறுவதற்கு இந்தச் சூத்திரம் இடம் தருகின்றது. துவைத மததததையே முழு போதனை யாகச் செய்யும் ஸ்ரீமாத்வாசாரியரும் வராகபுராணத்தி லிருந்து ஒரு செய்யுளை மேற்கோளாகக் காட்டி இந்தச் சூத்திரத்திற்கு இலகுவாகப் பொருள் கூறிவிடுகிறார்.

## விசிஷ்டாத்வைத கோள்கை:—

விசிஷ்டாத்வைத பாஷ்யகாராகிய ஸ்ரீ ராமானுஜர் இந்த சூத்திரத்தை எவ்வாறு வியாக்கியானம் செய்கிறா ரென்று கவனிப்போம். "இங்கே ஒரு சநதேகம் உற்பத்தி யாகிறது. முக்தியடைந்த ஜீவர்களுககுள்ள சக்திகளில் பரம்பொருளுக்கு உரிய விசேஷ சகதியும சேர்ந்திருக் கிறதா? ஜகத்தை ஸ்ருஷ்டித்து ரட்சித்து அழிக்கும் சகதி

யும உண்டா? சர்வ ஜகததையும் ஆளும் சக்தி யுண்டா? இல்லையானுல் முக்தி யடைநத ஜீவர்கள் பாமபொருளை நேரில் கண்டறியும பாக்கிய மாத்திர முடையவர்களா?

"ஜகததினிடம் ஆதிககமும் செலுத்தச் சகதியுண்டு என்று பாவிக்க நியாய மிருககிறதா? இருக்கிறதெனறு ஒருவாறு சொல்வோம. ஏனெனில், "முகதியடைநத ஜீவன் பாமபொருளுடன் சரிசமானமாகிய நிலையை அடைகிறுன்" என்று சாஸ்திரஙகள் போதிககின்றன. 'மாசுகளினின்று விடுபட்டவன் ஒரே சமத்வ நிலையை அடைகின்றுன்' என்று சொல்லப்படுகின்றது. மேலும, 'அவன் இச்சைகளெல்லாம் பூர்த்தியாகின்றன' எனறும் சொல்லப்படுகின்றது சரிசமானததுவமும இச்சைகளின் பூர்த்தியும அடையும்போது பாம்பொருளுககுச் சொநதமாகிய ஜகத்தை யாளும் சகதியும் ஏற்படததான வேண்டும. ஆதலால், முக்தியடைநத ஜீவர்கள் ஜகததை யாளும் சக்தியையும அடைகிறுர்கள் என்று சொல்லியே தீரவேண்டும.

"மேலே சொல்லிய ஆட்சேபனைகளுக்கு நாங்கள் சமாதானம் கூறுகிறேும. ஜகத்தை ஆளும் சத்திதவிர இதா சகதிகளை யெல்லாம் முக்தர்கள் அடைகிறுர்கள். அறிவுள்ள வஸ்துக்களின் வாழ்ககை, இச்சைமுதலியவற்றையும பல வித தோற்றங்களாகிய ரூபங்களையும நடததுவதே ஜகத்தை ஆளுவதாகும். மாயாதிரைகள நீங்கிப் ப்ரஹ்மானுபவமென்ற பெருமையை அடைநதிருககும் முக்த புருஷர்களுக்கு இந்தச் சக்தி கிடையாது. ஜகத்தை நிர்வகிக்கும சக்தி பாஹ்மததிற்கு மாத்திரமே உண்டு எனறு சாஸ்திரங்கள் கூறுகின்றன. 'எல்லா வஸ்துக்களும் எவரிடம் பிறககின்றனவோ, பிறநத பின் எவரிடம் வசிக்கின்றனவோ, பிரிந்து போகுமபோது எவரிடம் எல்லாம் திரும்புகின்றனவோ அவ்வித பாமனை இச்சிப்பாயாக. அந்தப்பாவஸ்துவே ப்ரஹ்மம.' முக்தியடைந்த புருஷர்களுககும் ஜகத்தை யாளும் சகதி சொநதமாக இருநதால் இந்த லட்சணம் பாம்பொருளுக்கென்று விசேஷித்துக் கூற முடியாமற்போம். இலட்ச

ணம் கூறும்போது ஒரு வஸ்துவிற்கு மாததிரமே விசேஷ மாக உள்ள குணஙகளைததான் கூறுவது வழக்கம். பின் வருமவாக்கியங்களையும கவனிக்கலாம்:—

என் அன்பு மிக்க பிள்ளாய்! ஆதியில் இரண்டற்ற ஒரே வஸ்து மாத்திரமே இருநதது. 'நான் பல வஸ்துக் களை உற்பத்தி செய்வேன' என்று அநத வஸ்துவே அறிந்து உணர்நதது.

ஆதியில் ப்ரஹ்மம் மாததிரமே யிருந்தது. அநத ஏக வஸ்துவே பரிணாமத்தை அடைந்தது. க்ஷேத்திரமென்ற காருண்யரூபததை உற்பத்தி செய்தது. வருணன், ஸோமன், ருத்ரன், பர்ஜன்யன், யமன் மிருத்யூ, ஈசானன் முதலிய தேவர்கள் க்ஷேததிரங்கள்.

ஆதியில் ஆத்மா ஒன்றே இருநதது; வேறு எவ்வித சலனமும் கிடையாது. அநத ஆத்மா பார்த்து, தான் உலகைச் சிருஷ்டித்ததாக அறிநதான. பிறகு உலகங்களைச் சிருஷ்டித்தான்.

நாராயணன தனியே இருந்தார். பிர்மா - ஈசானன் முதலியவர்களும, நட்சததிரங்களும், தண்ணீர் - அக்கினி-சோமன்-சூரியன் முதலியவர்களும் இல்லை தனியே இருப்பதில் திருப்தி யடையாமல் அவர் தியான மாத்திரத்தால் பத்து அங்கங்களாகிய ஒரு பெண்ணை உற்பத்தி செய்தார்.

எவர் பூமியில் வசித்தாலும் பூமியைக் காட்டிலும் வேறோ, எவர் ஆதமாவினிடமே வசிப்பவரோ;

இவைபோன்ற (ஸ்ரீராமாநுஜ பாஷ்ய வாக்கியங்களால் பரம்பொருள் ஜகத்தை ஆளுகின்ற புருஷனெனவே சுருதிரங்கள் தெரிவிக்கின்றன. இவ்விதம் ஜகத்தை ஆளும் காரியங்களில் முகதியடைநத ஜீவர்களுக்கு எவ்வித சமபந்தமும் கூறவில்லை. ஏனெனில், இந்த ஜீவர்களிடமிருந்து அந்தச் சக்தி வெகு தூரத்தே நிற்கின்றது. ஜீவர்கள் இநதச் சகதியை எட்டியும் பார்க்க முடியாது.

அடுத்த சூத்திரத்தைப்பற்றி ஸ்ரீராமாநுஜர் பின்வருமாறு வியாக்கியானம் செய்கின்றார்:—"வேதங்களில் இந்தக் கொள்கைக்கு நேர் விரோதமாகச் சில பாகங்கள் காணப்படுகின்றனவென்று நீங்கள் சொல்லக்கூடும். அந்தப் பாகங்களெல்லாம் கீழ்ப்பட்ட தேவ மண்டலங்களுடன் முகதியடைந்த புருஷர்களுக்குள்ள சம்பந்தத்தைத் தெரிவிக்கின்றன." இவ்விதம் கடின நிலைகள் விளக்கப்படுகின்றன. ஸ்ரீராமாநுஜ தத்துவமுறையானது மொத்தத் தொகுதியான ஜகத்தைப்பற்றிய ஒற்றுமையை ஒப்புக்கொண்டு, இதனிடம் அந்தர்க்கதமாக நிதயமான வேற்றுமைச் சுபாவங்கள் இருக்கின்றன என்று போதிக்கிறது. ஜகத்து முற்றிலும் வெவ்வேறு வேற்றுமைகள் நிரம்பிய ஒற்றுமையென்பது கருத்து. காரியங்களைப்பற்றிய வரையில் இம்முறையில் துவைதபாவனையே காணப்படுவதால் ஸ்ரீராமாநுஜர் வியஷ்டியாகிய ஜீவாத்மனையும், சகுணரூபியாகிய கடவுளையும் தெளிவாகப் பிரித்துப் பேதங் காட்டியிருக்கின்றார்.

அத்வைத தத்துவம்.—அத்வைத தத்துவத்திற் சிறந்த ஆசாரியராகிய ஸ்ரீசங்கரர் என்ன சொல்லுகிறார் என்று இனி கவனிப்போம். அத்வைத தத்துவத்தின் நிலை விசித்திரமானது. துவைத வாதிகளுடைய நம்பிக்கைக்கும் நோக்கங்களுக்கும் அத்வைதத்தில் இடமிருப்பதுடன் சிறந்த தெய்வத் தன்மையின் தத்துவமும் அங்குத் தெளிவாக்கப்படுகிறது. முகதியடைந்த பிறகும் தம் மனதை நசிக்கச்செய்யாதுகாக்க விரும்புகின்றவர்கள் தம் நோக்கங்களை இஷ்டப்படி அனுபவித்து, சகுணப்பிரம்மத்தின் முழு கருணையையும் அடைந்து, சுகமாகவே இருக்கலாம். இவ்விதமிருப்பவர்களைப்பற்றி ஸ்ரீபாகவத புராணம் பின்வருமாறு கூறுகின்றது: "ஏ! ராஜனே! கடவுளுடைய பெருமையான குணங்களைப் பற்றி என்னென்று வர்ணிப்பது. பந்தங்கள் எல்லாம் நீங்கப் பெற்று ஆத்மாவினிடமே சுகத்தைக் காணுகின்ற முனிவர்களும் கூட (பலாபேட்சையின்றி) அன்பின் நிமித்தமே சர்வ சக்திமானுகிய கடவுளிடம், அன்பைச் செலுத்து

கின்றார்கள். இவர்களை "பரக்ருதியில் லயமடைந்தவர்கள்" என்று சாங்கியர்களால் சொல்லப்படுகின்றார்கள். "இவர்கள் முக்தர்களானபின்னர் அடுத்த சிருஷ்டியில் ஜகத்தை நடத்தும் மகாபுருஷர்களாக ஆகிறார்கள்" என்றும் சொல்லப்படுகிறது. ஆனால், இவர்களில் எவரும் கடவுள் அல்லது ஈசுவரனுக்குச் சமமாக ஆவதில்லை. சிருஷ்டியென்றும், சிருஷ்டிக்கப்பட்ட பொருளென்றும், சிருஷ்டி கர்த்தாவென்றும் இல்லாத நிலைக்கு எழும்பியவர்கள்; அறிவது, அறிகிறவன், அறியப்பட்ட பொருள் என்ற பேதம் இல்லாத நிலைக்கு எழும்பியவர்கள்; நான், நீ, அவன் என்ற பேதங்களற்ற நிலையில் வசிப்பவர்கள், விஷயம், விஷயத்தைக் காண்பவன், சம்பந்தம் முதலியவை அற்ற இடத்தில், அப்படிப்பட்ட இடத்தில் யார் யாரைக் காண்பது? சகலத்திற்கும் அப்பாற்பட்ட நிலையை இவர்கள் அடைந்துவிட்டார்கள். "நேதி, நேதி" (இது அல்ல, இது அல்ல) என்று சுருதிகள் சொல்லும் நிலைக்கு அவர்கள் எழும்பியவர்கள். இந்த நிலையை அடைய முடியாதவர்களும் விருப்பமில்லாதவர்களும் இருக்கிறார்கள்; இவர்கள் மூன்றுவித பாவனைகளை அடைந்தே தீரவேண்டியவர்கள். பேதமற்று ஏகமாக இருக்கும் பிரமமத்தினிடம் (க) பரக்ருதி, (உ) ஆத்மன், (ங) இரண்டையும் தாங்கிக் கொண்டு அவற்றை ஊடுருவிப்பாய்ந்ததாக இருக்கப்பட்ட ஈசுவரன், என்றவைகளைக் காண்கின்றார்கள்.

பக்தி மேலீட்டினால் பிரஹலாதன் பிரக்ஞையுடன் கூடிய நிலைக்கு மேற்பட்டதாகிய (சமாதி)நிலையை அடைந்து தன்னை மறந்தவுடன், அவன் ஜகத்தையும் காணவில்லை; அதன் காரண வஸ்துவையும் காணவில்லை. சகலமும் ஏகமாய், அகண்ட வஸ்துவாகிய பிரமமமாய், நாமரூபங்களற்றதாய்க் காணப்பட்டன. பிறகு சாதாரண மனோநிலைக்குத் திரும்பியவுடன் தான் பிரஹலாதன் என்றும், தன் முன்னால் ஜகத் இருக்கிறதென்றும் தோன்றவே, ஜகத்தை நடத்தும் கர்த்தாவும் விளங்கிற்று. சுகசாதனங்கள் (குணங்கள்) நிறைந்த களஞ்சியமாக ஜகத் ரட்சகர் விளங்கினார். (கடவு

ளின்) கருணையை அடைந்த கோபிகைகளின் நிலையும் இதே மாதிரிதான். தங்களைபபற்றிய வியஷ்டி பாவனையை அடியுடன் மறந்து ஸ்ரீ கிருஷ்ண பகவானிடம ஆழ்ந்த அன்பைச செலுத்திய நிலையில இருந்தவரையில் அவர்கள் தாமே கிருஷ்ணர்கள் என நினைக்கலானார்கள். அப்படியிலலாமல் 'ஸ்ரீ கிருஷ்ணனை வணஙகவேண்டும' என்று நினைக்ககூடிய வியஷ்டி பாவனைகருக் கீழடஙகியபோதெலலாம அவர்கள் கோபிகைகளாகவே இருந்தார்கள். உடனே அவாகள் எதிரில ஸ்ரீ கிருஷ்ணபகவான தம தாமரைமலாபோனற முகத்தில் புன்முறுவலுடனும, மஞசள் படடாடையுடனும, பூமாலைகளுடனும, அழகினால மனமதனையும ஜெயித்த கோலங் கொண்டு தோன்றினன்

இபபோது ஸ்ரீ சங்காாசாரியரிடம நெருங்குவோம். ஆசாரியா கூறுவதென்ன? சகுண பிரமமதனைதயே வணங்கியதன் பயனுக பாம்பொருளுடன கூடுகிறவர்கள, தங்கள் வியஷ்டி பாவனையாகிய மனததை அபபடியே காபபாற்றியவர்கள், ஆகிய இவர்களது பெருமை கட்டுபபட்டதா, கட்டுப் படாததா? இநதச சநதேகம எழுமபியதும பின்வரும கட்சிகள் உண்டாகின்றன. அவர்களுடைய பெருமை கட்டுப்படாததுதான். "அவர்கள் சுயாாஜயத்தையடைகினறூர்கள்" என்றும, "அபபடிப்படடவனை எல்லாத தேவர்களும வணங்குகின்றூர்கள்" என்றும, "அவர்களுடைய இசசைகள் எல்லா உலகங்களிலும நிறைவேறுகினறன" என்றும, சாஸ்திரங்கள் முறையிடுகின்றன அல்லவா? இநதக கட்சிகளுககுப் பதில் மொழியாக வியாசர் "ஜகததை ஆளும் சகதியொன்று நீங்கலாக" என்கிறுர். ஜகத சிருஷ்டி, ஸ்திதி, நாசம முதலிய சகதிகளைத் தவிர அணிமாதி சிததிகளையுமகூடச் சுதந்திர புருஷர்கள் அடைகினறூர்கள் ஜகததை ஆளும சக்தி நித்ய முகதனுகிய ஈசுவரனுககு மாத்திரமே உண்டு. என் அபபடியெனில, சிருஷ்டியைபபற்றிக கூறுகிற சாஸ்திரஙகளெல்லாம அவரையே கர்த்தாவாகக கூறுகின்றன. முகத புருஷர்களின பெயர் அவற்றில் காணப்படவில்லை. எவ்வித சம்

பந்தமாகவும இவர்கள் பெயர் அங்கு இல்லை. பரம்பொரு ளாகிய கடவுள் ஒருவரே உண்மையில ஜகததை ஆளுகின் றவர். சிருஷ்டியைபபறறிக் கூறம நூலகளில் இவாது பெயர் வழங்கிவருமபோது "நிததிய முகதர்" என்ற பதம பிரயோகமாயிருககிறது. எபபோதும முகதராகவே இருப் பவர் எனபது பொருள். மேலும கடவுளை அடைய விருமபுவ தாலும கடவுள் வழிபாட்டினலும அணிமாதி சிததிகள் கிடைககின்றனவாதலால் இநதச சகதிகளுக்கு ஆதியுண்டு என்றேறபடுகிறது. அவை கட்டுககுட்பட்டவைகளே. ஆத லால, ஜகததை ஆளும நிலைமை அவற்றிறகுக கிடையாது. மேலும, அவவித முகதர்கள் தனிததனி வியஷ்டித தனமை யுடன கூடியவர்களா யிருககிறாகளாதலால் ஒருவருடைய மனேநிலை மற்றெருவருடைய மனதிற்கு மாறுபட்டதாக இருககக்கூடும இவவித முரணபாடுகள நீஙகுவதற்கு எலலா பாவனைகளும ஒரு (பரமபொருளுடைய) மனதிற் குக கீழ்பபட்டதாக இருகதல வேண்டும. ஆதலால், இவ்வித முகதாகளுடைய மனேபலமெலலாம ஒரு ஜகத ஈசனது மனேபலததிறகு உடபட்டதாக இருக்கவேண்டுமெனற கொளகை வெளியாகிறது

பகதி எனபது பிரமமததினிடம செலுததப்படுவ தென்றால், சகுணததினிடம செலுத்தபபடும என்றே கருதது "நிாககுண பிரமமததினிடமே மனதைச் செலுதது கிறவருககு வழி மிகக கடுமையானது." மனேமயப் பிர கிருதி யெனனும ஓடடத்தின் வழியே பகதன் இலகுவாகச் செலகிறன். யாதொரு குணஙகளுடனும கூடியிராத பிரமம த்தைபபற்றி நமது மனதில எவவித பாவனையும உணடாககிக் கொளளமுடியாது என்பது உண்மையலலவா? ஆனல், ஒரு விஷயம கவனிககவேண்டும. நமமால் அறியப்படும பொருள களின நிலைமைதான எபபடி? உலகததிலே மனேததுவ சாஸ்திரததில் பகவான் கபிலரைபபோல் எவரும பெருமை யடைநததிலலை. அவவித கபிலா என்ன சொல்கிறர் என்று பார்ப்போம. எவவளவோ காலங்களுக்கு முன் அவர் கூறிய

மொழிகளைக் கேளுங்கள்! ஜனங்களுக்கு விளங்குமாறு அவர் ஒரு பெரிய விஷயம் எடுத்ததுக கூறியுள்ளார். நாம் உணர்கிற வஸ்துககளிலும நினைககும நினைவுகளிலும் மன தில் தோனறும எண்ணமும ஒரு அம்சமே எனகிறார் நமது தேகம முதற்கொண்டு ஈசுவரனவரையில் நாம அறியும் விஷயங்களெலலாம நமது அறிவும, வேறு ஏதோ ஒன்றும் சேர்நது ஆககப்பட்டவைகளென்று நாம அறிய முடியும். அநத ஏதோ ஒன்று எதுவாயிருநதபோதிலும சரி; இரண் டும சோநத சோககையே நாம உண்மையாக இருககிற தென்று நினைககும விஷயங்களாகும. மனதினால் அறியக கூடிய விஷயமெலலாம இவவித சேர்ககையாகத்தான் இருககமுடியும. ஆதலால், குணஙகளற்ற நிலையில் உள்ளவர் ஈசுவரன் என்று நாம சொல்வதால அவ்வித ஈசுவரன் பொய்யாக இருககவேண்டும என்று சொலலிவிட முயாது. மெய்ப்பொருள் என்ற வார்ததையை ஆதாரமாக வைத் துககொண்டு உண்மை வேறு, லட்சியம வேறு என்று சொல்வதுபோல் வீண்வார்ததைச சண்டைகளில் புகுநது விளையாடுகிற மேனாட்டுத் தத்துவ கலைகளைபபோல் ஆகி விடக கூடாது. உண்மை என்ற பதம எநதெநத நிலைமை களைத தெரிவிததபோதிலும அவை யாவும சேர்ந்தே ஈசு வரன் என்ற மொழிக்குள் அடககம். ஜகத்தில உள்ள மற்ற வஸ்துககளின் உண்மை எவ்வளவு தூரம உண்மையோ அவவளவு தூரம ஈசுவரனும உண்மைதான். உண்மை யென்ற பதமும நாம் ஏற்கனவே குறிபபிட்ட பொருளில் தான நமக்கு விளங்கும. ஹிநது தததுவ நூல்களில ஈசு வரனைப்பற்றிய தததுவம இவவளவுதான.



## மூன்றாவது அதிகாரம்

# ஆத்மானுபவமே லட்சியம்

சாஸ்திரங்களைப்பற்றிய விவரமான வாதங்கள் பயனற்றவைகளே யாயினும் பக்தனுக்கு உறுதியைக் கொடுப்பதற்கு அவை அவசியமாக இருக்கின்றன. இதற்குமேல் அவற்றால் அவன் பயனடைவதில்லை. தர்க்கங்கள் செய்வதற்குக் காரணமான பகுத்தறிவு மயக்கத்தையும் கஷ்டத்தையுமே உண்டாக்கவல்ல பிரதேசங்களில் போய் நின்றுவிடுகிறது. பக்தனோ இந்தப் பிரதேசத்திற்கும் அப்பால் உள்ள ஓர் இடத்திற்குச் செல்கின்றான். பகட்டான வேஷத்துடன் கூடிய பகுத்தறிவு (விஷய ஆராய்ச்சியறிவு) பக்தனுக்குப் பின்னால் வெகு தூரத்திற்கப்பால் நின்றுவிடுகிறது. கடவுள் கருணையால் இருட்டில் தடவச்செய்யும் பகுத்தறிவை விட்டுவிட்டு நேருக்குநேர் நோக்கும் காட்சியாகிய ஜோதிமயப் பிரதேசத்தில் பக்தன் விளங்குகிறான். விஷயங்களை அறிவினால் ஆராய்ந்து பார்த்து நம்புவதற்குப் பதில் அவன் நேரே உணருகிறான்; கட்சியாட இடமில்லாதபடி நேரில் சம்பந்தப்படுகிறான். கடவுளை இவ்வாறு காண்பதும் உணருவதும் அனுபவிப்பதும் கடவுளைப்பற்றி யறிந்து கட்சியாடுவதைக் காட்டிலும் எவ்வளவு மேன்மையான நிலைமை பாருங்கள்! 'விடுதலையாகிய மோட்சத்தையும்விட இந்த நிலை பெரியது,' என்று வாதிக்கும் பக்தர்களும் உண்டு. அந்த நிலையே உயர்ந்த பலனுமாகும்.

'மனிதனிக்குச் சரீர சுகத்தைத் தரக்கூடிய சாதனங்கள் மாத்திரமே உபயோக முள்ளவைகள்' என்று உறுதி கூறும் மனிதர் பலர் இவ் வுலகத்தில் இருக்கின்றார்கள். மத விஷயம், கடவுள், நித்யதத்துவம், ஜீவன் முதலிய விஷயங்கள் ஸ்தூல தேகத்திற்குச் சுகம் கொடுப்பதில்லையாதலால் இவற்

றை அவர்கள் விரும்புவதில்லை. இந்திரியங்களுக்குத் திருப்தி யளித்து மிருகத்தன்மையான ஆசைகளைப் பூர்த்திசெய்ய உபயோகமில்லாத விஷயங்கள அவர்கள் கண்களுக்குப் பலனில்லாதவைகளெனத் தோன்றும. பலன் அல்லது உபயோகத்தைத் தரக்கூடியவை என்றால் என்ன கருத்து? ஒவ்வொருவர் மனதிலும தத்தமக்கு எவை குறைகள் என்று தோன்றுகின்றனவோ அவைகளுக்குத் தக்கபடி உபயோகம் என்ற பதத்தின் கருத்தும வேறுபடுகிறது. ஆதலால், உண்பதும குடிப்பதும மக்கட்பேறடைவதுமே வாழ்க்கையென்று கருதி மேலான நிலைக்கு எழும்பாதவர் மனதில இந்திரிய சுகங்களைத்தவிர வேறெதுவும உபயோக முள்ளவைகளாகத் தோனறாது. மேலான நிலைக்குச் செல்ல வேண்டியது அவசியமதான என்று உணர்வதற்கு இவர்கள் இன்னும பலபல ஜன்மங்கள் எடுத்தாகவேண்டும ஆனால், உத்தமர்களாய்ப் பல பெரியோர்களும உண்டு, தோன்றி மறையும இப் பிரபஞ்ச வாழ்க்கையைக்காட்டிலும் நித்ய மான ஆத்மதாமங்கள் மேலானவைகளென்று அவர்கள் நினைக்கின்றார்கள். இந்திரியங்களைத் திருப்திசெய்வது குழந் தைகளின விளையாட்டுகளுக்குச் சமமெனறும, அறிவுடைய செயலக ளல்லவென்றும் அவர்களுக்குத் தோன்றுகினறது. 'பக்தியின மூலமாகக் கடவு ளனுபவத்தை யடைவது மாத் திரமே மானிடவாழ்க்கையில பயனுள்ள விஷயம்' என்று நினைக்கிறார்கள். இக்காலத்திலும கூட இவ்வித மனிதர்கள் வசிக்கிறார்கள. கடவுளின் கருணையால் அப்படிப்பட்டவர் களை நாம இப்போதும காண முடியும.

பக்தியோகமெனபது கௌணி என்றும, பரம் என்றும் இருவகைப்படும கௌணி எனபது ஆரம்பநிலை; பரம் என் பது உன்னதநிலை. ஆரம்பநிலையில் பல ஸ்தூல உதவிகள் நமக்கு அவசியம் வேண்டும இந்த அவசியம மேலே போகப் போக விளங்கும. எல்லா மதங்களிலும புராண பாகங்களும கிரியா பாகங்களும உண்டு. இவைகள் ஜீவனுக்குத் துணை யாக நின்று கடவுளிடம நெருங்குமாறு செய்யும. புராண

மாகப் பேசினாலும் யாதொரு பயனுமில்லை. தர்ம வழியில் சிறிதளவு அப்பியாசம் செய்தாலும் எவ்வளவோ பயன்கள் அதிகமாகத் தோன்றியிருக்கின்றார்கள். அப்படிக்கின்றி, சாரமற்ற சில மதங்கள் உண்டு. ஆத்மதாம அழிக்கின்றிச் சில வெறிகொண்ட கிரியைகளை மாத்திரமே அடக்கிக்கொண்டிருக்கும் மதங்கள் பயனற்றவைகளே. இசை, இனிமை, அழகு, காம்பீரியம் முதலிய பெருமைகளை இழந்து விளங்கும் மதக்கொள்கைகளும் கிரியாபாகங்களும், பரிபக்குவமில்லாத மனத்தைத் தத்தளித்துக் கொண்டிருக்கும்போது கடவுளிடம் அதை அழைத்துக்கொண்டுபோய்ச் சேர்க்க ஊன்றுகோலாக உதவாத மதங்களும் ஆத்மீக வீட்டின் மேற்கூரையைத் தாங்கி நிற்கும் தூண்களைத் தகர்த்து விடும். உண்மை அல்லது மெய்ப்பொருளைப்பற்றிய மூட நம்பிக்கையினால் அவர்கள் ஜீவனுக்கு எழுச்சியைத் தரக்கூடிய அம்சங்களைப் போக்கிக்கொள்கின்றார்கள். “ஜீவன்” என்ற பூமியில் முளைத்து வளர்ந்து வருவதாகிய “ஆத்மப்பயிற்சி” என்ற செடி வளர்வதற்குத் தேவையாகிய சாதன விஷயங்களை அழிக்கின்றார்கள். அப்படிப்பட்ட மதத்தில் முடிவில் தங்கி நிற்பதென்ன? பொருளற்ற சொற்களும், சமூகச்சீர்திருத்தம் என்ற பெயரால் நடக்கக்கூடிய அற்பத் தொழில்களுமே மீதியாகும். இவ்வித மதக்கொள்கைகளையே பின்பற்றி நடப்பவர்களில் பெரும்பாலோர் அறிந்தும் அறியாமலும் ஜடதத்துவ வாதிகளாக இருப்பவர்கள். அவர்களுடைய லட்சியமெல்லாம் இவ்வுலகிலும் சரி, மறுமையிலும் சரி, இந்திரிய சுகங்களைப் பூர்த்தி செய்வதேயாம். ஆதலால்தான் தெருக்கூட்டும் தொழில் முதலியவைகள்—மனிதனுக்கு ஜடசம்பந்தமான சுகத்தைக் கொடுப்பவைகள்—அவர்களுடைய வாழ்க்கையில் மேலான விஷயங்களென மதிக்கப்படுகின்றன. அறிவீனமும் வீண் வெறியும் இவர்களிடம் நிரம்பி விடுகின்றன. ஜடதத்துவ வாதிகளும் நிரீசுவர வாதிகளும் சேர்ந்த கூட்டத்தில் இவர்களையும் சேர்த்துவிடலாம். ஏனெனில், காரியத்திற்குப் பயன் கொடுக்காத வீண் உணர்ச்சிகள் இவர்களிடம் நிரம்பியிருப்பதால் இவர்கள் பாமர பார

பாகங்களும் கிரியாபாகங்களும் எந்த மதங்களில் ஏராளமாக உண்டோ அந்த மதங்களிலிருந்தே ஆத்ம தர்ம வீரர்ளுண்டு. மேலே சொல்லப்பட்ட பயனற்றவர்களில் ஆத்ம தர்மவீரர் ஒருவரையாவது காட்ட முடியுமா? முடியாதென்று நிச்சயம் சொல்ல முடியும். ஆதலால், வாய்களை மூடிக்கொண்டு, உங்கள் ஹிருதயங்கள் என்னும் ஜன்னல்களைத் திறந்து வைத்துக்கொள்ளுங்கள்! மெய்ப்பொருளின் ஜோதி தானே வந்து சேரும். தாங்கள் பேசும் விஷயங்களை மிகத் திறமையாக அறிந்தவர்களான பரதக்கண்டத்து முனிவர்களிடம் நெருங்கி அவர்கள் பாதங்களில் அமர்ந்து குழந்தைகளைப் போல இருப்பீர்களாக!



நான்காவது அதிகாரம்

# குரு சிஷ்ய லட்சணங்கள்

ஒவ்வொரு ஜீவனும முததிநிலையாகிய பூரணத தன்மையை அடைநதே தீரவேண்டும; முடிவில ஒவவொரு பிராணியும பூரண நிலையை அடைநதுவிடும. இதறகு முன் நாம் நினைதத எண்ணங்களும செய்த செய்கைகளும சோநது இப்போதுள்ள நிலையை நமககுக் கொடுத்திருககின்றன; (அவவாறு) நாம இபபோது நினைககும நினைபபும, செய்யம் செய்கையும நமது பிறகால நிலைக்குக காரண மாகும. இவ்விதம நமது விதியை நாமே செய்துகொளகிறோ மென்றாலும வெளி யுதவியும சிறசில சநதாபபஙகளில அவசியமாக இருககினறது. ஜனஙகளில பெருமபான்மையோர் வெளியுதவிகளை அவசியம நாடவேண்டியவர்களாகவு மிருககினறார் கள. அவவாறு வெளியுதவி கிடைககுமபோது ஜீவனுடைய சக்திகளும சாதனஙகளும கூர்மையடைநது ஆதமீக வாழ்க கையை எழுப்பிவிடுகினறன; வளாசசி துரிதமாக ஆகின் றது; முடிவில மனிதன பரிசுததமான பரிபூரண நிலையை அடைகிறான.

நூல்களைக கற்பதன மூலமாக இவ்வித துரித உணர்சசி ஏறபடுவதிலலை. ஒரு ஜீவன மற்றொரு ஜீவனிடமிருநதே இவ்வித உணர்சசியைப் பெற முடியும நம வாழ்நாள முழுமையும நூலகளைக கற்று மிகுநத புததிமானகளாக ஆக முடியும. அதனால ஆதம தர்மாபிவிருததி ஏறபட்டுவிடாது. எவவளவுக கெவவளவு புததிககூர்மை அதிகரிககின்றதோ அவவளவுககவவளவு ஆதமாபிவிருததியு மேற்படுமென்று சொல்ல முடியாது. இநத இரண்டும சமபநதமுள்ளவைக ளலல. ஆதமதர்ம நூறபயிறசியால் ஆத்மவழியில நாம் உதவி பெறுகிறோமெனறு மயககம நமககு ஏறபடககூடும.

ஆனால், நம்மையே நாம் சோதித்துப் பார்த்தால் நமக்குக் கிடைத்திருப்பதெல்லாம் புத்திக் கூர்மையேயன்றி வேறல்லவென்று காண்போம். உள்ளே யிருக்கும் ஆத்மா யாதொரு பயனு மடையவில்லை யென்பது புலப்படும். நம்மில் பலர் ஆத்ம விஷயங்களைப்பற்றி மிகவும் அபூர்வமாகப் பேசிவிடுகிறோம். காரியத்தில் பார்ப்போமானால், உண்மையான ஆத்ம வழியில் நாம் மிகவும் கீழ்ப்பட்ட நிலையில் இருப்பது விளங்கலாம். இதற்குக் காரணமென்ன? ஆத்மதர்ம எழுச்சிக்கு நூற்கல்வி மாத்திரம் பயனிலலை என்பதேயாம். ஒரு ஜீவனை மேலெழும்பச் செய்யும் உணர்ச்சி மற்றொரு ஜீவனிட மிருந்து வரவேண்டும். எந்த மனிதரிடமிருந்து அவ்வித உணர்ச்சி கிடைக்கின்றதோ அவரே ஆசாரியர் அல்லது குரு. எவருக்கு இவ் வுணர்ச்சி புகட்டப்படுகிறதோ அவரே சிஷ்யன். இவ்விதம் சுதந்திரமாகிய மூக்திக்குச் சாதனமாகிய உணர்ச்சி புகட்டப்படுவதற்கு என்ன வேண்டும்? ஆசாரியராக இருப்பவரிடம் புகட்டும் சக்தியும், சிஷ்யனாக இருப்பவரிடம் புகட்டப்பட்ட சக்தியைப் பெற்றுக் கொள்ளும் திறனும் வேண்டும். விதையினிடம் ஜீவசக்தி யிருப்பதுடன், விதைக்கப்படும் பூமியும் உழுது பண்படுத்தப்பட்டிருக்கவேண்டும். இந்த இரண்டும் தயாராக இருக்கும்போது அபூர்வமான மெய்ப்பொருளைக் காட்டும் மத தர்மமாகிய செடி வளர்கின்றது. "மத தர்மத்தை உபதேசிக்கும் ஆசாரியனிடம் அபூர்வமான சக்திகள் பொருந்தியிருக்கவேண்டும்; அவரிடம் கேட்கின்றவனும் சமர்த்தனாக இருக்கவேண்டும்." இவ்வாறு இருவரிடமும் அரிய அபூர்வ குணங்கள் இருந்தால் மாத்திரமே மிக நேர்த்தியான ஆத்ம எழுச்சி உதிக்கும்; வேறு எவ்விதமிருந்தாலும் எழுச்சி ஏற்படாது. உண்மையான ஆசாரியர்களும் சிஷ்யர்களும் இவ்வளவு மகிமை பொருந்தியவர்கள். ஆத்மதர்ம அனுபவம் வேண்டுமென்று இச்சிக்கிறவர்களின் மகிமை இவ்வளவு மேலானது. மற்றவர்களெல்லோரும் ஆத்மதர்மமென்ற பெயரைச் சொல்லிக்கொண்டு விளையாடுகிறவர்களே. 'புத்தியின் மூலமாக அறிவோம்' என்ற விருப்பம்

பலரிடமிருக்கலாம்; இவ்வித ஆவல் தீவிரமாக இருந்தாலும், மதத்தாமமென்ற ஸ்தலத்தை மூடிக்கொண்டிருக்கும் திரையின் சாயலையே இவர்கள் பிடித்தவர்களாவார்கள். இதிலும் சிறு பயன்கள் உண்டு என்பது மெய்தான், எப்போதாவது இவர்கள் ஒருகாலத்தில் மதத்தாம அனுபவம் வேண்டுமென்று இச்சை கொள்வார்கள். அப்படிச் செய்ய இந்த அறிவே சாதனமாக ஆகலாம். இவ்வித எழுச்சியுடன் கூடி மனம் பக்குவமடைந்தவுடன் உபதேசமாகிய விதை வந்தே தீரும் இதுவே விதி. மனப்பூர்வமான இச்சை முதிரும்போது ஆசாரியன் கிடைத்தே தீரவேண்டும். அவசியம் வலுவில் வருவார். ஆத்மதாம ஜோதியை இழுக்கின்ற சக்தி சீஷனிடம் பலமாகவும் பூர்ணமாகவும் விளங்கும் போது இழுக்கப்படும் சக்தியும் வலுவில அந்த ஜோதியை அனுப்பிவிடுகிறது. இது இயற்கையாகவே நடைபெற்று வருகிறது.

ஆனாலும், வழியில் பெரிய ஆபத்துக்கள் உள. ஒவ்வொரு சந்தாப்பங்களில் ஜீவர்களுக்கு விசேஷ உணர்ச்சிகள் தோன்றும். நமது வாழ்க்கைகளில் அவ்விதம் பல தடவைகள் தோன்றுவதை நாம் பார்க்கலாம். நாம் மிகுதியாக அன்பு செலுத்திவந்த ஒருவர் இறந்துபோகிறார். உடனே நமக்கு ஒரு அதிர்ச்சி உண்டாகிறது. இவ்வுலகமே நம்மிடமிருந்து நழுவிப்போவதாகத் தோன்றுவதோடு ஏதேனும் உயர்ந்ததாகவும் நித்தியமாகவுமுள்ள வஸ்து வேண்டும் என்ற இச்சையும் அப்போது உண்டாகக்கூடும்; ஆத்மானுபவம் வேண்டும் என்ற அவாவே அது. இவ்வித உணர்ச்சியை உண்மையான ஞான இச்சையென்று தவறாக நினைத்துவிடுவோம் சிறிது நாட்களுக்குள் இந்த உணர்ச்சி மறைந்துவிடுகிறது; முன் ஸ்திதிக்கு வந்துவிடுகிறோம். இவ்விதம் சந்தர்ப்ப வேற்றுமைகளால் ஏற்பட்டுச் சிறிது நேரமே நிற்கக்கூடியதாகிய இந்த உணர்ச்சிகளை உண்மையான ஞான இச்சையென்று நாம் நினைக்கும் வரையில் ஜீவன் தாழ்ந்த நிலையில் இருப்பவனே. ஆதலால், இவ்வித

சுபாபமுள்ளவனுக்கு ஜீவனை ரட்சிக்கத்தக்க உபதேசம் செய்வதற்கு ஆசாரியன் கிடைக்கமாட்டான். உண்மையான ஞானதாகம் இடைவிடாமல் எப்போதும் எவ்வித சந்தர்ப்பங்களிலும் மாறாமல் இருந்துகொண்டிருக்கும். ஆதலால், எப்போதாவது நாம் ஆத்மோபதேசம் வேண்டுமென்று விரும்பி அது பலிக்கவில்லையென்று தோன்றினால் உடனே நம்மையே சோதித்துப் பார்த்துக்கொள்ள வேண்டும். 'நம் ஹிருதயத்தில் தோன்றிய இச்சை ஸ்திரமாக உள்ளதா?' என்று பார்க்கவேண்டும். அப்போது அநேகமாக எல்லோருக்குமே விளங்கும்; ஆத்மோபதேசத்திற்கு நாம் தகுதியற்றவர்கள் என்றறிவோம் ஏனெனில், இச்சை ஸ்திரமாக இல்லையென்றறிவோம். இவ்வளவு வரையில் சிஷ்யனுடைய லட்சணங்களில் உள்ள குறையைப்பற்றிக் கூறினோம்.

இதுபோலவே ஆத்மோபதேசம் செய்யவரும் குருவைப்பற்றியும் ஜாக்கிரதைவேண்டும். அறிவீனத்தில்—அஞ்ஞானத்தில்—ஆழ்ந்திருக்கும் பலர் தம் ஹிருதயத்தில் மிக்க மமதையுள்ளவர்களாய் மதவிஷயங்களைப்பற்றிச் சகலமும் தமக்குத் தெரியுமென்று நினைத்துவிடுகின்றார்கள் நினைப்போடு நின்றுவிட்டால் பிறருக்காவது கேடு நேராமலிருக்கும். இவர்கள் தாம் கெட்டதுமன்றிப் பிறருக்கு வழி காட்டவும் கிளம்பிவிடுகின்றார்கள். குருடனுக்குக் குருடன் கோல் கொடுத்து வழிகாட்டிவரும் கொள்கைபோல் இருவரும் அஞ்ஞானமென்ற பள்ளத்தில் விழுகின்றார்கள். "மூடர்கள் அஞ்ஞானத்தில் ஆழ்ந்து அதுவே ஞானமென்று கர்வம் கொண்டு பயனற்ற அறிவால் பூரிப்படைந்தவர்களாய் இங்குமங்கும் அலைந்து தள்ளாடி முடிவில் குருடனுக்குக் குருடன் வழிகாட்டியதுபோல ஆகின்றார்கள்" இவ்வித மனிதர்கள் உலகில் நிறைந்திருக்கிறார்கள். ஒவ்வொருவனும் ஆசாரியனாகப் பார்க்கின்றான். ஒவ்வொரு பிச்சைக்காரனும் லட்சக்கணக்கான டாலர்களை யாசகத்தில் செலவிட விரும்புகின்றான். இவ்வித பிச்சைக்காரர் எப்படி மூடர்களோ அதே மாதிரி அவ்வித ஆசாரியர்களும் ஆகின்றார்கள்.

அப்படியானல் குரு அல்லது ஆசாரியனை நாமறிவது எப்படி? இந்தக் கேள்விக்குப் பதில் வேண்டியதில்லை. சூரியனைக் கண்டுபிடிப்பதற்கு ஒருவிளக்கை ஏற்றிப் பார்க்கவேண்டாம். உதயமானவுடன் நம் முன்னர் சூரியன் தானே விளங்குகிறன்; அதுபோலவே, நமக்கு உதவிபுரிய ஆசாரிய புருஷன் தோன்றும்போது மெய்ப்பொருளின் ஜோதி ஜீவன் மீது விழுவது அதற்கு நன்முகத் தெரியும். இது சத்திய வஸ்துவென்று ருஜுப்படுத்த வேறொரு வஸ்து தேவையில்லை, அது சுயம்ஜோதியல்லவா? நமது சொரூபமெங்கும் ஊடுருவிப் பாய்ந்துவிடுகிறது இந்த ஜகத் முழுமையும் "இதுவே மெய்ப்பொருள்" என்று தெளிவாகக் குறித்துக் காட்டிவிடுகிறது. உலகில் தோன்றி மிகச் சிறந்த ஆத்மோபதேசம் செய்துவந்த ஆசாரியர்களிடம் சத்சொரூபமும் ஞான ஜோதியும் சூரியனிடம் ஒளி விளங்குவதுபோல் விளங்கிவந்தன. அதனுல் மனிதர்களெல்லோரும் அப்படிப்பட்டவர்களைத் தெய்வங்களென மதித்து வணங்கிவருகிறர்கள். ஆனல், அவ்வளவு சிறந்த மகா புருஷர்களைக்காட்டிலும் கீழ்நிலையிலுள்ள ஆசாரியர்களிடமும் நாம் உபதேசம் பெற்றுப் பலனடையலாம். ஆனல், நாம் உதவிபெறக்கூடிய ஆசாரியரிடம் உள்ள யோக்கியதைகளைக் கண்டுபிடிக்கத் தக்க மனேசக்தி நம்மிடம் இல்லையாதலால், சிஷ்யனுக்கு இருக்க வேண்டியதைப்போல் ஆசாரியனுக்கும் சில லட்சணங்கள் அவசியம் வேண்டும். முதலில் சிஷ்யனுக்கு வேண்டிய லட்சணங்களைக் கூறுகிறேன்.

பரிசுத்ததன்மை, அறிவு, வேண்டுமென்ற உண்மையான தாகம், விடாமுயற்சி முதலிய குணங்கள் மாணுக்கனிடம் அவசியம் இருத்தல்வேண்டும். பரிசுத்தக் குறைவுள்ள ஜீவனிடம் ஆத்மப்பயிற்சி ஏற்படாது. மனே வாக்குக் காயங்களில் பரிசுத்த குணம் அவசியம் நிறைந்திருக்கவேண்டும். அப்போதுமாத்திரமே ஆத்மப்பயிற்சி உறுதிப்படும். பிறகு அறிவையடைய தாகம் வேண்டும். 'நாம் விரும்பியதை நாம் அடைகிறேம்' என்பது ஒரு புராதன மொழி.

மனப்பூர்வமாக இச்சித்த எவ்வித பொருளும் நமக்குக் கிடைப்பதில்லை. ஆத்மானுபவம் வேண்டுமென்ற தாகமிருப்பது மிக அருமைதான் சுலபமாக அது வந்துவிடுமென்று நினைக்கவேண்டாம். மதசம்பந்தமான வாதங்களைக் கேட்பதாலும், மதவிஷயங்களடங்கிய நூல்களைப் படிப்பதாலும் ஹிருதயத்தில் ஆத்மபயிற்சி வேண்டுமென்ற அவா நிறைந்திருப்பதாக நினைத்தல் கூடாது. இவைகள் போதுமானருஜுக்களல்ல. இடைவிடாத சச்சரவும் போராட்டமும் இருக்கவேண்டும். நம்மிடமுள்ள கீழான (மிருக) சுபாவங்களுடன் விடாப்பிடியாக எதிர்த்து நிற்கவேண்டும். இவ்விதம் விடாமல் போராடி வருவதன் பயனாக ஞானதாகம் நம்மிடம் வேரூன்றி நாம் பயன் பெறுவோம். ஒன்றிரண்டு நாட்களிலும் வருஷங்களிலும் ஆகிறகாரியமல்ல இது. ஒரு ஜன்மத்தில் முடியாமற்போகலாம். பல ஜன்மகாலம் இந்தப் போராட்டம் நடைபெறக்கூடும். சிலருக்குச் சீக்கிரம் பலன் கிடைக்கலாமாயினும் ஒவ்வொருவரும் மிகப் பொறுமையுடன் காத்திருக்கத் தைரியங்கொள்ளவேண்டும். எவ்வளவு காலமானாலும் காத்திருக்கத் தைரியங்கொள்வது முக்கியமாக வேண்டிய குணம் இவ்வளவு விடாமுயற்சியுடன் வாழ்க்கைப்போரை நடத்த ஆரம்பித்த மாணுக்கன் முடிவில் ஆத்மானுபவமாகிய வெற்றி பெறுவது நிச்சயம்.

இனி ஆசாரியரது லட்சணங்கள் எவை யென்று கவனிப்போம். சாஸ்திரங்களின் கருத்தை ஆசாரியன் தெளிவாக அறிந்திருக்கவேண்டும். உலகில் எல்லோருமே வேதபுத்தகங்களையும், கோரானையும், பைபிளையும் படித்துவிடுகின்றார்கள். அவர்கள் படிப்பதெல்லாம் எவ்வளவு? வார்த்தையளவே யென்று சொல்வோமா? அல்லது வாக்கியங்களின் அமைப்பு, ஒழுங்கு, தாதுப் பொருள், இதர பாஷைகளுடன் இந்த பாஷைக்குள்ள சம்பந்தம் முதலியவைகளைக் கற்றுத் தேர்ந்தவர் என்போமா? எப்படிக் கூறினாலும் இவைகள் எல்லாம் மதமென்பதன் எலும்புகளேயல்லவா? சொற்களின் லட்சணங்களைப்பற்றியே அதிகம் கிளறிக்கொண்டிருக்கும் ஆசாரியர் சொற்களின் பலத்திலே

மனதைச் செலுததியவராய், சாஸ்திரங்களின கருததை இழந்துவிடுகிறார். உண்மையான ஆசாரியரிடம சாஸ்திரங்களின் கருததைகை யறியும சகதி யிருககவேண்டும. சொறகளின மயககத்தில அகப்படுவது ஆசாரியரின் லட்சணமலல. சாஸ்திரங்களின வாசகங்களென்னும பெரிய வனததிற்குள் மானிடர் மனம புகுநதுகொண்டால வெளியே வர வழி தெரியாமல தவிகக நேரிடும. "மனது விநோத குணங்களுடன் அலைநது திரிவதறகுக் காரணம சொறகளென்ற பெரிய வனமேயாம." என்று விவேக சூடாமணி சொல்வது குறிப்பிடததககது. "சொறகளைப பலவிதஙகளில சேர்த்துப் படிபபது, வசன நடையில பலவித அழகுகள அமைத்துப் பேசுவது, நூல்களில அடங்கிய விஷயங்களைப பலவிதமாக விளக்கிக காட்டிச சாமாததியததை விளஙகச செய்வது, கறறவர்களது தர்ககஙகள் ஆகிய இவையெல்லாம யாது பயனை விளைககும? புததியைக கூர்மையாககிப பெருமைப படுதத இவைகள் உபயோகமாகலாம. ஆதமானுபவததில முன்னேற்றமடைய அவை பயனபடுவதில்லை. சொற்களுககுப பலவித பொருளகளைப் போதிதது மதவிஷயங்களைப புகட்ட விருமபுகிறவர்கள் தமது கல்விப பயிறசியைப் பிறர் அறிய விருபபமுடையவர்களே யன்றி உணமையான ஆசாரியராக மாட்டார்கள். தாம பெரிய விதவான என்று உலகம் தம்மைப் புகழவேண்டு மெனபதே அவர்கள் கொள்கை உலகததில் பெரிய ஆசாரியர்களாக இருநத எவரும நூலகளுககு இவ்வாறு விரிவாகப் பொருள் கூறியதில்லை; கருததைத் திருததி மாற்றவும முயறசி யெடுததுக கொண்டதில்லை. சொறகள் இவை, அவற்றின் தாதுப் பொருள இவை என்று விளையாட அவர்கள முன்வநததில்லை. சாஸ்திரங்களில் அடங்கிய ஜீவாதார விஷயங்களை உபதேசம செய்து அவாகள சும்மா இருநதுவிட்டனர். உபதேசம செய்யககூடிய சகதி தமமிடம இல்லாதவர்கள் நூல்களிலிருநது ஒரு வார்ததையை வெளியே எடுதது அநத வார்ததையை விளக்க மூன்று வால்யூம புஸதகங்கள் எழுதிவிடுவார்கள். "அநத மொழி இங்கு உறபததியாயி

ற்று. முதன்முதலில் இவர்கள் உபயோகித்தனர்; அவர்கள் இன்ன உணவை ஏற்றுக்கொண்டு ஜீவித்தவர்கள்; இவ்வளவுகாலம் தூங்கி வந்தவர்கள் என்று பல விவரங்களைப் புகட்டுவார்கள்.

பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் ஒரு கதை செய்வது வழக்கம். சில மனிதர்கள் ஒரு மாமரத்தோப்பிற்குள் புகுந்தனர். அங்கு மரங்களிலுள்ள கிளைகளையும் கொம்புகளையும் இலைகளையும் எண்ணிப்பார்க்க ஆரம்பித்தனர். அவற்றின் நிறம், உருவம் முதலிய ஒவ்வொன்றையும் விடாமல் குறித்துக்கொண்டு பிறகு அந்த விஷயங்களைப்பற்றி மிகவும் சாமர்த்தியமாகத் தர்க்கம் நடத்தினர். இந்த விஷய அறிவு அவர்களுக்கு மிகுந்த திருப்தியைக் கொடுத்தது. அப்படியிருக்கும்போது அவர்களுள் ஒருவன், மற்றவர்களைவிட அதிக புத்திமான், அவைகளைப்பற்றி லட்சியம் செய்யாதவனாய் மாம்பழத்தைச் சாப்பிட ஆரம்பித்தான். அவன் புத்திமானல்லவா? ஆதலால், இலைகளை எண்ணும் காரியமும் குறிப்பெடுத்துத் தர்க்கம் செய்வதும் மற்றவர்கள் கைக்கொள்ளட்டும். அந்த வேலைகளுக்கும் இடமிருக்கிறது. அவைகளும் உபயோக முள்ளவைகள்தாம். ஆனால், ஆத்ம தர்ம விஷயங்களைப்பற்றிப் பேசும் இடங்களில் அவை வேண்டியதில்லை. அவ்வாறு இலைகளை எண்ணுகிறவர்களுக்குள் பலமாக ஆத்மானுபவம் படைத்தவர்கள் கிடைக்கமாட்டார்கள். வாழ்க்கையில் மிக உன்னத பயனை விளைவிக்கக்கூடிய மதவிஷயத்தில அந்த வேலை வேண்டியதில்லை. உண்மையான பக்தனாக நீ இருக்க விரும்பினால் "ஸ்ரீகிருஷ்ணபகவான் மதுரையில் பிறந்தாரா? விராஜா நகரில் பிறந்தாரா?" என்று விசாரிக்கவேண்டியதில்லை. "அவர் எப்படி வாழ்க்கையை நடத்தினார்? அல்லது எப்போது கீதையை உபதேசம் செய்தார்?" என்று விசாரித்துக்கொண்டிருக்க வேண்டாம். கடமை, பக்தி என்னும் அழகிய பாடங்கள் கீதையில் காணப்படுகின்றன. அவற்றை அனுபவத்திற்குக் கொண்டுவரவேண்டும் என்னும் ஆசை உள்ளிருந்து உங்

களை எப்போதும் தூண்டிக்கொண்டிருகக வேண்டும்; உணர்ச்சி முழுமையும் அநத அவா நிறைநதிருக்கவேண்டும். மற்றப்படி கீதையைப்பற்றிய விவரமும அதை எழுதியவர் எவர் என்ற விஷயமும் கற்றவர்கள் அனுபவிப்பதற்கேயாம். கல்விப்பயிற்சி வேண்டியவர்கள் அவற்றை அடையட்டும். அவர்களுடைய கல்வித் திறமைகளைப் பார்த்து "சாந்தி, சாநதி" என்று சொலலி முடிததுவிட்டு நாம பழங்களைச் சாப்பிடுவோம்.

ஆசாரியருக்கு வேண்டிய மற்றொரு லட்சணம பாப மற்ற வாழ்ககை. "ஒரு ஆசிரியனுடைய குணம் எப்படியிருநதால் என்ன? அவர் பரிசுத்தவானு என்று ஆராய்வதன் அவசியமென்ன? அவர் கூறும் மொழிகளை நிதானித்து அறிநதுகொண்டு சாரத்தை எடுத்துக்கொள்வோம். அவ்வளவு போதாதா?" என்று கேட்கின்றூர்கள். இது சரியல்ல. பிரபஞ்சதர்மங்களாகிய ரசாயனம, சகதிதத்துவம் முதலியவற்றில ஒன்றைப்பற்றி ஒருவர் எனககுப் போதிக்கவநதால் அவரது குணங்கள் எப்படியிருநதாலும சரியே. ஏனெனில், இநதப் பாடங்களுககு வேண்டியதெல்லாம் புத்தியின்மூலம் அடையப்படும் அறிவு. ஆத்மசம்பந்தமான சாஸ்திரங்களிலோ இது போதாது. பரிசுத்த குணமில்லாத ஜீவர்களிடம் ஆத்மஜோதியைக் காண முடியாது. ஆதலால், மாசடைநத மனதையுடையவன் எவ்விதம் மததததை உபதேசம்செய்யமுடியும்? ஆத்மசமபந்தமான சத்விஷயத்தை அடையவும், அடைநதபின் பிறருக்குப போதிக்கவும் பரிபூர்ண பரிசுதத ஹிருதயம் வேண்டும. ஜீவன் பரிசுததனுக இல்லாமற்போனுல் அப்பாலுள்ள வஸ்துவின் சாயை அல்லது கடவுளின் காட்சி ஏற்பட முடியாது. ஆதலால், மதபோதனை செய்யும் ஆசாரியர் எவ்வாறு தம வாழ்க்கையை நடத்துகிறூர் என்று முக்கியமாகக் கவனிக்கவேண்டும. பிறகுதான் அவர் கூறும் மொழிகளைக் கேட்கவேண்டும். அவருடைய சொற்கள் பயன்படவேண்டுமானுல், மதவிஷய உண்மையைச சீஷனுககுப்புகட்டும் சகதிவேண்டு

மானல் ஆசாரியரிடம் பரிபூர்ண பரிசுத்தகுணம் வேண்டும். உண்மையான ஆதமசக்தி தம்மிடம கிடையாதென்றால் ஆசாரியர் சிஷனுக்கு எதைப் புகட்டுவது? ஆசாரியர் மனதில் மிகப் பலமான ஆத்மசகதி நிறைநதிருநதால்மாத்திரம் சிஷனுடைய மனத்திலும் அதே சகதியைப் புகட்ட முடியும். புததிக்கூர்மை முதலிய குணங்களைச் சிஷனிடம் விர்த்தி செய்வது ஆசாரியர் செய்யும் வேலையல்ல; உண்மையில் ஏதோ ஒரு புதிய வஸ்துவையே ஆசாரியர் சிஷனிடம புகட்டவேண்டும். புதிதாக ஒருவித செல்வாக்கைச் செலுத்திக்கொண்டு ஏதோ ஒரு சகதி சிஷனிடம வந்து சேர்வது உண்மையாக இருக்கிறது ஆதலால், ஆசாரியரும் பரிசுத்த குணம் படைத்தவரா யிருக்கவேண்டும.

பிறகு ஆசாரியரின் எண்ணம் எப்படியென் றறிய' வண்டும். சுயநலம் பொருநதிய எண்ணத்துடன், பண அல்லது புகழ்வேண்டுமென்ற கருத்துகொண்டு ஆ -ாரியர் போதிககலாகாது. அனபு மாத்திரமே நிறைந்தவராய், மனிதவர்ககம பிழைக்கவேண்டுமென்ற நல்லெண்ணத்தால் மாத்திரம தூண்டப்பட்டு, ஆசாரியா வேலை செய்ய வேண்டும. ஏனெனில், அன்பின வழியாக மாததிரமே ஆத்மசக்தி பிறரிடம் செல்லககூடியது. தனத்திற்காவது பெயருக்காவது ஆசைகொண்டு எவ்வித சுயநலம பொருநதிய சிந்தையும் குறுககிடலாகாது. அப்படிக குறுக்கிட்டால் அன்பென்பது அழிநது ஆத்மசகதி செல்வதற்குப் பாதையும தடைப்பட்டுவிடும். அன்பே கடவுள், இவ்விதம் அன்பும் கடவுளும் ஒன்று என்றறிநதவர் மாத்திரமே கடவுள் தத்துவத்தைப் போதிககவல்லவர்.

ஆதலால், மேலே சொல்லப்பட்ட லட்சணங்கள் ஆசாரியரிடம் தென்படுமானல் உனக்கு நன்மை யுண்டு; இல்லையானல் அநத ஆசாரியரிடம நீ உபதேசம் பெறுவது நல்லதலல. ஏனெனில், ஆசாரியரிடம ஆத்மப்பயிறசி இல்லாவிட்டால் அவர் உன் ஹிருதயத்தில் உலகப் பற்றையே உண்டாக்கிவிடுவார். இநதப் பெரிய ஆபத்தினின்று நீ

தப்பவேண்டும். கற்றவராகவும், மாசு மறு அற்றவராகவும், காமவிகாரங்கள் அற்றவராகவும் உள்ளவர் எவரோ அவரே பிரம்மத்தை அறிந்தவர்களுக்குள் பெரியவர்.

மேலே சொல்லப்பட்ட விஷயங்களிலிருந்து தெரிவதென்ன? நாம் எந்த இடத்திலும் எவர் மூலமாகவேண்டுமானாலும் மதவிஷயத்தில் பக்தியைச் செலுத்தவும் அறிந்து அனுபவிக்கவும் முடியாது. "கற்களில் உபதேசம் அடையலாம், ஓடுகின்ற அருவிகளில் நூல்கள் படிக்கலாம், தோன்றக்கூடிய வஸ்துக்களின் மூலமாக நன்மை யடையலாம்." என்று கூறுவதெல்லாம் கவிகளுக்கு லட்சணம் தான். ஆனால், மனிதனிடம் ஏற்கனவே உண்மைப்பொருள் இல்லைவிட்டால் மேற்சொல்லிய வஸ்துக்களிலிருந்து எதையும் அடைய முடியாது. கற்களும் அருவிகளும் எவருக்கு உபதேசம் செய்கின்றன. மானிட ஹிருதயத்திற்கல்லவா உபதேசம் வேண்டும். பரிசுத்த ஹிருதயத்தில் ஜீவதாது துரிதமாகத் துடித்துக்கொண்டிருக்கும்போது ஞான ஒளி வந்து குடிகொள்ளவேண்டும். ஹிருதயகமலம் திறப்பதற்கு வேண்டிய ஒளி அல்லது ஜோதி எப்போதும் நல்ல ஞானியாகிய ஆசாரியரிடமிருந்துதான வரவேண்டும். இவ்விதம் ஹிருதயகமலம் திறந்த பிறகு கற்கள், அருவிகள், சூரிய சந்திர நட்சத்திரங்கள் முதலியவற்றினின்றும் ஜகத்திலுள்ள வேறு வஸ்துக்களினின்றும் உபதேசங்களைப் பெற முடியும். ஹிருதயகமலம் இவ்விதம் ஆசாரியரால் திறக்கப்படாதவரையில் கல்லில் கல்தான் தெரியும், நதியில் நதியே தென்படும்; வேறு எவ்வித அழகும் அவற்றில் தோன்றாது. குருடன் பொருட் காட்சிச்சாலையில் சென்றான் என்றால் ஏதேனும் பயனுண்டோ? குருடனுக்குக் கண் கிடைத்த பிறகே பொருட் காட்சிச்சாலையின் அழகு அவனுக்கு விளங்கும்.

மதவிஷயானுபவம் வேண்டுமென்று விரும்புகிற சிஷ்யனுக்குக் கண் திறக்க ஆசாரியன் வேண்டும். முன்னோர்களிடம் பின் சந்ததியார்கள் வணக்கம் செலுத்தவேண்டி

பது அவசியம். அதுபோலவே, ஆசாரியரிடம் நாம் பக்தி, வணக்கம், தாழ்தல், மரியாதை முதலிய குணங்களைக் காட்டவேண்டும். இந்தக் குணங்கள் இல்லாவிட்டால் நம்மிடம் மதவிஷயானுபவம் பலமாக ஊன்றாது. ஆசாரியருக்கும் சிஷனுக்கும் இவ்வித சம்பந்தம் எங்குப் பலமாக விளங்குகிறதோ அங்கேதான் மிகப்பலமான ஆத்மசக்தி பொருந்தியவர்கள் கிடைக்கிறார்கள் என்பதைக் கவனிக்கலாம். இவ்வித சம்பந்தத்தை வளர்க்காத தேசங்களில் மதாசாரியர் சாமான்ய உபந்யாசம் செய்பவராக மாத்திரம் விளங்குகிறார். அத் தேசங்களில் ஆசாரியர் தமக்குத் தகுதியான வெகுமதியை எதிர்பார்க்கிறார். சிஷனும் தன் புத்திக்குள் பல விஷயங்கள் நிரம்பவேண்டுமென்று எதிர்பார்க்கிறான். பிறகு இருவரும் பிரிந்துவிடுகிறார்கள். ஒருவரையொருவர் மறந்துவிடுகிறார்கள். இந்த நிலையில் ஆத்மப் பயிற்சியென்பது சூன்யமாகிவிடுகிறது. ஆத்மதர்மம் ஒருவரிடம் அமைந்திருக்கவு மில்லை; மற்றொருவரிடம் கொடுபடுவது மில்லை. அவ்வித ஜனங்களுக்கு மதமும் ஒரு வியாபாரச் சரக்குப்போலாகிறது. பணத்தைக் கொடுத்து மதவிஷயம் அறியலாம் என்று நினைக்கிறார்கள். இவ்வளவு இலகுவாக மததர்மம் கிடைத்துவிடுமோ? ஒருக்காலும் கிடைக்காது.

மனிதனுடைய அறிவும் ஞானமும் உன்னத பலனைக் கொடுக்கும்போது மததர்மமாகின்றன. இந்தத் தர்மம் நூல்களைப் படிப்பதால் அறிய முடியாது. உலகில் எல்லா மூலை முடுக்குகளிலும் நீங்கள் அலைந்து திரிந்தாலும், ஹிமாசலமெங்கும் திரிந்து வந்தாலும், உலகிலுள்ள வேறெந்த மலைகளில்ஏறித் திரிந்தாலும், கடலின் ஆழத்தைக் கண்டுபிடித்தாலும், ஒவ்வொரு மலையையும் குடைந்து பார்த்தாலும், வனாந்தரங்களையெல்லாம் போய்ப் பார்த்துவந்தாலும் யாது பயனுண்டு? உங்கள் ஹிருதயகமலம் திறந்து ஆசாரியன் சமீபத்திலிருந்தாலன்றி ஆத்மானுபவம் உங்களுக்கு அகப்படாது என்பது நிச்சயம். ஆதலால், கடவுளருளால் உங்

களுக்கு ஆசாரியர் கிடைக்கும்போது அவரிடம் குழந்தையைப்போல் பழகிக, கபடமின்றி நம்பிக்கையுடன அவருககு ஊழியம் செய்யவேண்டும். ஆசாரியருடைய செல்வாககு உஙகளிடம தாராளமாகச் செல்லட்டும. அவர் இஷ்டம போல உங்கள் மனம நடக்கட்டும. அவரைக கடவுளென்றே பாவனை செய்யுங்கள். ஆசாரியரிடம இவ்வித அனபும் பகதியுமகொண்டு மெய்ப்பொருள் அறிவை அடைய விருமபுகிறவர் எவரோ அவா மாததிரமே தெய்வத்தன்மை ஆதமததததுவம முதலியவற்றின் அரிய பெரிய ரகஸ்யத்தை அறிய முடியும்.

# ஐந்தாவது அதிகாரம்

## அவதார புருஷர்கள்

"கடவுளின் மகிமை பேசப்படுமிடம் பரிசுத்த மடைகிறது" என்று சொல்லப்படுகிறது. அப்படியானால் கடவுளின் மகிமையைப் பேசுகிறவன எவ்வளவு பரிசுததமடைவான் பாருங்கள். ஆதலால், உண்மையான ஆதம ஜோதியைப் பிறருககு அளிக்ககூடிய மகிமையுள்ளவனிடம எவ்வளவு மரியாதையுடன் நாம் நெருங்கவேண்டும என்று யோசிததுப்பாருங்கள். ஆதமவஸ்துவைப் போதிக்கத்தக்க ஆசாரியர்கள் மிகச் சொற்பமாக உலகில் இருநதபோதிலும ஒருபோதும் இவ்வித மஹான்கள் இல்லாமற் போவதில்லை. இவ்வித மஹா புருஷர் ஒருவரும இல்லாமற் போகும் காலம வநதவுடன்—எப்போதாவது வந்தால்—உலகம மிககொடிய நாகமாக மாறி அழிநதுபோகும் வழியில் செலல ஆரம்பிககும. அவ்வித ஆசாரிய புருஷர்கள் மனிதவர்க்கததில் மிகச சிறநதவாகளே. "யாதொரு இச்சையு மில்லாத கருணாசாகாம" என்று அவர்களைச் சொல்லலாம். ஸ்ரீ கிருஷ்ண பகவான் பகவதகீதையில் கூறுவதைக் கேளுங்கள. "நான் எலலோருககும ஆசாரியன் என்றறியுள்கள்." பாவஸ்துவாகிய ஈசுவானது அவதாரங்கள்—ஸ்ரீ கிருஷ்ண பகவானைப்போன்ற அவதார புருஷர்கள்—சாதாரண ஆசாரியர்களெல்லோரையுமவிட மிக மேலான நிலையிலும் கண்ணியமான பதவியிலும வசிப்பவர்களாவார்கள். இவர்கள் தமது ஸ்பாச மாத்திரத்தால்—சிற்சிலர் தம் இச்சா மாத்திரததால்கூட — ஆதமவித்தையைப் புகட்டிவிடச் சக்தி பொருநதியவர்கள். மிகமிகக கடைப்படியில், மிக இழிந்த நிலையில் உள்ளவனும் இவர்களுடைய கட்டளையால் ஒரு விநாடிப் பொழுதில் முனிவனாக மாறி

விடுகிறான். ஆதமவித்யா போதகர்களுக்கும் ஆசாரியர்க ளாய் இவர்கள் விளங்குகிறார்கள். மனித சொரூபத்தின் மூலமாகக கடவுளின் உன்னத ஆவிர்ப்பவமென்று அவர் களைச் சொல்லிவிடவேண்டும். அவர்கள் மூலமாக அன்றி வேறுவிதமாக நாம கடவுளைக் காண முடியாது. மனிதன் அவர்களை வணங்கியே தீரவேண்டியவனாகின்றான்; இவர் களைமாததிரமே மனிதன் வணங்கித் தீரவேண்டும.

கடவுள் இவ்வாறு மானிட உருவங்கொண்டு ஆவிர்ப் பவிக்கும்போது மாததிரமே மனிதன் கடவுளைக காண முடி யும். வேறு எவவிதமாகவும கடவுள் தெனபடுவதில்லை. ஏன் என்பீர்களோ! கேளுங்கள்! வேறுவிதமாகப பார்க்க முயல்வோமானால் நாம் எவவித உருவததை மனதில் நினைப் பது? நாம் நினைககக்கூடிய உருவமெல்லாம கடவுளின் மிககொடிய சொரூபமாகவே முடியும. அவற்றையே கடவுள் என்று வணங்குவோம். ஒரு அஞ்ஞானியைச சிவ பிரானது விககிரகம செய்யுமாறு ஒரு காலததில் கட்டளை யிட்டார்களாம. பல நாட்களா மிகுநத கஷ்டப்பட்டபின் அவன் ஒரு குரங்கின் விககிரகம செய்து முடிததானாம். இப் படி ஒரு கதை யுண்டு. (பிள்ளையார் பிடிககப்போய்க் குரங் காக முடிநதது.) இதன் கருத்தென்ன? கடவுளின் உண் மையான சொரூபததை—பரிபூரண பிரமம சொரூபததை —உள்ளபடி அறிய நாம செய்யும் முயற்சியெல்லாம மிக வும் துககரமாக முடிவடைகின்றன. தன் ஜீவ சொரூபத்தி னின்று முற்றிலும வேறுபட்டதாகக கடவுளைக காண்பது மானிட இயறகையி லில்லை. நாம மானிட இயற்கைககு மேலே எழுமபககூடிய காலமும் எப்போதாவது வரலாம். அப்போது கடவுளின் உண்மைச் சொரூபம நமக்கு விளங் கும். ஆனால், தற்காலமிருக்குமவண்ணம பந்த நிலையில் நாமிருக்குமவரையில் கடவுளை மனிதர்மூலமாக மானிட உருவத்திலதான் நாம பார்க்கவேண்டும. எவ்வளவு வேண்டு மானாலும பேசிவிடலாம; எவ்வளவு வேண்டுமானாலும் முயற்சிசெய்து பாருங்கள். மானிட சொரூபத்திலல்லாமல்

வேறு சொரூபத்தில் நீங்கள் கடவுளை நினைக்கவும் முடியாது. புத்தி சாதுர்யமான உபந்யாசங்கள் கடவுளைப்பற்றி நீங்கள் பேசலாம; பகுத்தறிவே சகலமும் என்று வாதாடுகிறவர்களாக நீங்கள் இருக்கலாம். கடவுளின் அவதாரங்களைப் பற்றிய சரித்திரங்களும் கதைகளும் அபத்தம் என்று ருஜுப்படுத்தி நீங்கள் திருப்தியடையலாம். ஆனால், சாமான்ய அறிவைக்கொண்டு அனுபவ மெப்படி யிருக்கிறதென்று கவனித்தால் உண்மை விளங்கிவிடும். இந்தக் கட்சிகளில் எவ்வித சாரமும் காண்பது அரிதாகிவிடும். கடவுளின் அவதாரங்களை வணங்குவதைக் கண்டித்து எவரேனும் உபந்யாசம் செய்வதை நீங்கள் இனிக் கேட்க நேர்ந்தால், அவரைக் கெட்டியாகப் பிடித்துக்கொள்ளுங்கள். கடவுளைப் பற்றி அவருடைய கொள்கை யென்னவென்று கேட்டுவிடுங்கள். எங்கும் வியாபி, சர்வ சக்திமான என்னும் பல சொற்களுக்கு அவர் கூறும் பொருள்களைக் கேட்டுவிடுங்கள். அந்தச் சொற்களை எழுத்துக்கூட்டிவிடுவார்கள். இதைத் தவிர வேறொன்றும் அவர்களுக்குத் தெரியாது. அச் சொற்களைப்பற்றி அவர் எவ்வித கருத்தும் கொண்டவர்களல்ல. ஏதேனும் பொருள்கள் கூறவந்தாலும் அவற்றில் அவரது சுபாவம்—மனோபாவனை—நிறைந்து விளங்கும். ஒரு புத்தகம் படிக்காமல் இருக்கும் சாமான்ய மனிதனை விட இவர்கள் இவ் விஷயத்தில் உயர்ந்தவர்களல்ல வென்பது உங்களுக்கு வெளியாகும். சாமான்ய மனிதன் வாய் மூடி மௌனமாக இருந்துவிடுகிறான்; உலகத்தின் அமைதியை அவன் கெடுப்பதில்லை. மேலே சொல்லியபடி கட்சியாடுகிறவர் மனித வாக்கத்தில் கலக்கத்தையும் துக்கத்தையும் உண்டுபண்ணுகிறார்கள்.

மததர்மமென்பது வாய்ப்பறை யல்ல; நேரில் கண்டறியும் அனுபவ உண்மையாக இருப்பது மதவிஷயம். ஆதலால், வாய்ப்பறை செய்து வெற்றிபெறும் நிலைக்கும் உண்மையான உள்ளுணர்ச்சிக்கும் வித்தியாசத்தை நாம் அறிய வேண்டியது அவசியம். நமது ஜீவனிடம் ஆழ்ந்து அனுப

விக்கும் அனுபவமே மத மெனப்படுவது. இவ் விஷயத்தில் மனிதர்கள் தம் புத்தியை உபயோகித்துப் பார்ப்பது அரிதாயிருக்கிறது.

நமது மனம் ஒரு விசேஷமான அமைப்பை உடையதாயிருக்கிறது. இந்த மனதின் சகாயத்தால கடவுளை மனித சொரூபத்திலதான் பார்க்க முடியும. எருமைகள் கடவுளை வணங்க விரும்பினால் என்ன செய்யும? அவைகள் தம் சுபாவத்தைக்கொண்டே கடவுளும ஒரு பெரிய எருமையென்றே பாவித்துவிடும். இது உண்மையிலும உண்மை. ஒரு மீன் கடவுளை வணங்க நேர்ந்தால அக கடவுள் ஒரு பெரிய மச்சமென அதற்குத் தோன்றும். மனிதனும கடவுளை மனித உருவததிலதான் நினைக்க நேரிடும. கடவுளைப் பற்றிய இவ்வித கொள்கைகளெல்லாம் மனத்தின்கண் தாமஸகுண மேலிட்டதால் ஏற்பட்டவைகளென்று நினைக்கக்கூடாது; அவ்வித குறைகள் காரணமல்ல. மனிதன், எருமை, மீன் முதலியவைகள் பலவித உருவங்களுடனகூடி பலவித சகதிகளையுடைய பாத்திரஙகள போனறவை. இந்தப் பாத்திரங்களைக கடவுளென்ற சாகரத்தில் கொண்டு போய் அமிழ்த்தினால் அநதக் கடற்றண்ணீர் பாத்திரங்களின் ரூபங்களைத் தாங்கி அவற்றுள் நிறைகின்றன. இந்தப் பாததிரங்களிடம இருப்பதெலலாம கடவுளாகிய கடற்றண்ணீர்தான். ஆனால், பாததிரங்களின் உருவததுடன் தான் அத் தண்ணீர் தோன்றவேண்டும. அதுபோலவே, பல மனிதர்களும் தததம் மனசசக்திககு ஏறற அளவு முடிந்த வரையில் கடவுளைப்பற்றிய கொள்கையை ஏறபடுததிக கொள்கின்றார்கள். இது இயற்கையாகவே உளள குணம. எவர்மீதும குறை கூறுவதறகிலலை. கடவுளைப்பற்றி நினைககவும் அவரை வணங்கவும் நமக்கு வேறு சாதனம—மனதைத் தவிர—கிடையாதல்லவா?

சிலர், கடவுளை மனித சொரூபததுடன் கூடியவராக நினைத்து வணங்குவதில்லை. அவர்கள் இருவகை. யாதொரு மதமுமின்றி—நிரீசுவர வாதியாகி—மிருகங்களுககுச் சம

மாக இருப்பவர்கள் ஒரு வகுப்பு. முக்த புருஷர்களாகிய பரமஹம்ஸர்கள் மற்றொரு வகுப்பு. பரமஹம்ஸர்களுக்குப் பிரகிருதி முழுவதும் ஆத்மஜோதியுடன் தோன்றுகிறது. தம் மானிட சுபாவத்தைக் கடந்து அப்பால் சென்று பலஹீனத்தை யெல்லாம் போக்கிக்கொண்டு அவர்கள் விளங்குகிறார்கள். இவர்கள் மாத்திரமே கடவுளை உள்ளபடி (சுயஜோதிமயமாக) அறிய வல்லவர்கள். பிரகிருதி தர்மம் இங்கும் விளங்குகிறது. எந்த விஷயத்திலும் இரண்டு கோடியும் சேர்ந்துவிடுகின்றன. ஆழ்ந்த அஞ்ஞானியும் மிகச் சிறந்த ஞானியும் கடவுள் வணக்கம் என்ற காரியத்தி லிறங்குவதில்லை. மிருகப் பிராயத்திலிருப்பவன் அறிவீனத்தால் வணங்காமலிருக்கிறான். ஜீவன்முக்தர்கள் தமமுள் கடவுளைக் கண்டனுபவித்தவருகின்றார்கள்; அதனால் கடவுளை வணங்கவேண்டிய நிலையில் அவர்கள் இல்லை. ஆனால், இந்த இரண்டு கோடிக்கும் இடையில் நாம் இருந்துகொண்டு கடவுளை மனித சொரூபத்தில் வணங்கமாட்டேன் என்று சொல்வது பொருந்தாது. அப்படி ஒருவன் சொல்வானாகில் அவனிடம் ஜாக்கிரதையாக இருக்கவேண்டும். பொறுப்பின்றிக் கண்டபடி பேசுகின்றவன் என்று மாத்திரம் அவனைக் கூறிவிடுவோம்; வேறு கடின அடைமொழிகள் கொடுக்கவேண்டியதில்லை. அப்படிப்பட்டவனுடைய மதமும் ஒழுங்கான புத்தியுள்ளவர்களுக்கு ஏற்பட்டதல்ல.

மனிதர்களுக்குள்ள இந்தக் குறையைக் கடவுள் அறிந்து மனிதவர்க்கத்திற்கு உதவி செய்ய மானிட உருவங் தாங்கி அவதரிக்கிறார். "தர்மம் தேய்ந்து அதர்மம் ஓங்கி நிற்கும்போதெல்லாம் நான் ஆவிர்ப்பவிக்கின்றேன். தர்மத்தை ஸ்தாபிக்கவும், அதர்மத்தை ஒழிக்கவும், நல்லோர்களைக் காக்கவும், யுகங்கள்தோறும் நான் தோன்றுகிறேன்." "மூடர்கள் என்னைப் பரிகசிக்கிறார்கள். நான் ஜகத்தையே ரட்சிக்கிறவன் என்பதை யறியாமல் மானிட உருவங் கொண்டு விளங்கும் என்னைப் பரிகசிக்கிறார்கள்." இவ்விதம் ஸ்ரீ கிருஷ்ணன் கீதையில் கடவுளின் அவதாரங்களைப்

பற்றிச் சொல்லியிருக்கின்றார். பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஒரு காலத்தில் சொல்லியிருப்பதைக் கேளுங்கள்: "ஒரு பெரிய அலை எழும்பும்போது சிறு கால்வாய்களும் சாக்கடைகளும்கூட நீர் நிறைந்துவிடுகின்றன. அவ்வாறு நிரப்பிக்கொள்வதற்கு அவை முயற்சி செய்யவேண்டியதில்லை. அதுபோல, அவதார புருஷன் வரும்போது ஆத்ம வெள்ளம் என்னும் பெரிய அலை உலகில் எழும்புகிறது. ஆகாயமெங்கும் தெய்வீக மணம் வீசுவதை ஜனங்கள் அறிந்துவிடுகிறார்கள்."

# ஆறாவது அதிகாரம்

## 'ஓம்' என்ற மந்திரமும் அதன் உட்பொருளும்

நாம் இப்போது கடவுளின் அவதாரங்களாக மதிக்கத்தக்க மகாபுருஷர்களைப்பற்றி ஆலோசிக்கவேண்டியதில்லை. முக்தியடைந்தவர்களான ஆசாரியபுருஷர்களாயுள்ள சித்த குருமார்களைப்பற்றியே பேசுகிறோம் என்பதை அறியவேண்டும். இவர்கள் எல்லோரும் சாதாரணமாய் ஆத்மஞான வித்துக்களை சீஷர்களிடம் ஏதேனும் ஒரு மந்திர மூலமாகவே புகட்டிவருவது வழக்கம். அந்த மந்திரத்தைத் தியானிப்பதால் சீஷன் கடைத்தேறுவான். இந்த மந்திரங்கள் என்ன கருத்தை விளக்குகின்றன? அதைத் தியானிப்பதற்குக் காரணமென்ன? சிருஷ்டியில் ஜகத் சொரூபம் தோன்றுவதற்கு நாமரூபங்கள் அவசியமென்பது இந்திய தத்துவ சாஸ்திரத்தின் கருத்தாகும். மனிதன் என்ற அந்தப் பிரகிருதியில் மனத்தினிடம் தோன்றுகிற (எண்ணங்களாகிற) அலைகளைக் கவனியுங்கள். நாமரூபங்களென்ற பந்தத்திற்கடங்காத ஒரு அலைகூடக் கிடைப்பதரிது என்பது நன்றாக விளங்கும். பிரகிருதி முழுமையும் ஒரே தத்துவம் நிரம்பியிருக்கிறதென்பது உண்மையானால் வெளிப் பிரகிருதி முழுமையுங்கூட நாம ரூபங்களுக்குட்பட்டதாகவே இருக்கவேண்டும். ஒரு மண்கட்டி அறியப்பட்டால் எல்லா மண்ணும் அறியப்பட்டதாகும். அதுபோலவே, அந்தப் பிரகிருதியின் பூரண அறிவும் நமக்குக் கிடைத்துவிட்டால் வெளிப் பிரகிருதியின் ஞானம் வந்தே தீரும். ஆதலால், விசாரித்தறிவோம். நாமம் அல்லது லட்சியத்தை உள்ளே வைத்து மேலே மூடிக்கொண்டிருக்கும் ஓட்டிற்கு ரூபம்

என்று பெயர். சிறிய பிரபஞ்சமாக விளங்கும் மனிதனிடத்தில் தேகமே ரூபம. உள்ளேயிருக்கும அந்தக்கரணம் அல்லது மனம் என்பதே நாமமாகும். பேசும் சக்திபொருந்திய பிராணிகளிடத்திலெல்லாம சப்த சின்னங்களை நாமமென்று சொல்வது வழக்கமாயிருக்கிறது. இதைச் சற்று விளக்கிச் சொல்வோம. வியஷ்டி பாவனையுடன்கூடிய மனிதனிடம பந்த நிலையிலுள்ள மகத் இருக்கிறது. (இதுதான் அந்தக்கரணம்.) இதிலிருந்துதான் மனம என்பது உண்டாக்கப்படுகிறது. இதனிடம எழுகின்ற எண்ணங்களாகிற அலைகள் முதலில தொனி (சொற்கள) அல்லது மனோபாவனைகளாகிப் பிறகு வாக்கு என்றும செய்கையென்றும ரூபங்களாகின்றன.

இதுபோலவே வெளிப் பிரகிருதியிலும் நடைபெறுகிறது. பிரம்மா அல்லது ஹிரண்யகர்ப்பம் முதலில் நாமம் அல்லது பாவனையென்று தோன்றிப் பிறகு வெளிப் பிரகிருதியாகிய ரூபத்தை ஏற்றுக்கொள்கிறது. இந்திரியங்களின் மூலமாகக்கிரகிப்பதற்குத் தகுந்தபடி அமைக்கப்பெற்றுள்ள பிரகிருதி முழுமையும ரூபமே. இதைத் தாங்கிகொண்டு இதற்கு ஆதாரமாக நித்தியமானதும் வாக்கிற்கெட்டாததுமான ஸ்போடம் என்பது அமைந்துள்ளது. இதுவே லோகங்களாகவும் தொனியாகவும் விளங்கும மூலஸ்தானம. சுபாவத்தில் இந்த ஸ்போடம் நித்தியமாக உள்ளது சகலவித பாவனைகளாகிய நாமங்களும இதிலிருந்துதான்தோன்றுகின்றன. நாமங்களையெல்லாம உண்டாக்குவதற்கு மூலமாகிய சார வஸ்துவாக ஸ்போடம் இருக்கின்றது. மேலும், கடவுள் ஜகத்தை சிருஷ்டிப்பதற்குச் சக்தியாக விளங்குவதும் அதுவே. கடவுள் முதலில் ஸ்போடம் என்ற பந்த நிலைமையி லிறங்கிப் பிறகு அதிக ஸ்தூலரூபமான விஷய ஜகத்தாகத் தாமே ஆவிர்ப்பவிக்கிறார். ஸ்போடம் என்ற நிலையைக் குறிப்பதற்கு ஒரே ஒரு தொனிதானுண்டு. அது தான் ஓம் என்பது. ஒரு சப்தத்திலிருந்து அதனால் குறிக்கப்படும் மனோபாவனையைப் பிரிக்க முடியாது. இந்த விதி

எங்கும் உண்மையாகத்தானுள்ளது. ஆதலால், ஓம் என்பதும் நித்யமாக உள்ள ஸ்போடம் என்பதும் ஒன்றிலிருந்து ஒன்று பிரிகக முடியாத நிலையில அமைந்திருக்கின்றன. இதனால்தான் நாமங்களுககெல்லாம் உற்பத்தி ஸ்தானமாக உள்ளதும, நிததியமாக உள்ளதும, மிகமிகப் பரிசுத்த மானதுமாகிய ஓம் என்ற தொனியிலிருநது இந்த ஸ்தூலப் பிரபஞ்சமெல்லாம் சிருஷ்டிக்கப்பட்டிருககின்றன. என்று சாஸ்திரங்கள் தெரிவிக்கின்றன. ஒரு சந்தேகம் உண்டாகலாம். பாவனைகளும் சப்தங்களும பிரிகக முடியாதபடி அமைந்திருந்தபோதிலும், ஒரு பாவனையைக் குறிககப் பல சப்தங்கள் விளங்குகின்றன. அதுபோலவே, ஓம் என்ற ஒரு குறிப்புமாத்திரமே ஜகத்தை ஆவிர்ப்பவிக்க ஆதி காரணமாக நிற்கும நித்தியமான சொரூபத்தைக் குறிகக ஏற்பட்டதென்று கொள்ளவேண்டிய அவசிய மில்லை யென்று தோன்றலாம். இநத ஆட்சேபனைக்கு நாங்கள் பதில் கூற முடியும். எவ்வளவு பாவனைகள உலகில் தோன்றககூடுமோ அவவளவையும சேர்தது ஒரே தொனியால் குறிப்பதறகு ஓம் எனபதைத் தவிர வேறெதுவும் கிடையாது எனபோம. ஸ்போடம் என்ற வஸ்துவிலிருந்து எல்லாப் பாவனைகளும் உற்பததியாகின்றன; அவவளவே யன்றி அதுவே ஒரு குறிப்பிட்ட தனி பாவனையல்ல. அதாவது, ஒவ்வொரு பாவனை அல்லது கொள்கையிலிருந்தும் அது தனிப்பபட்டதென்று பிரித்துக் காட்டுகிற பேதததை நீககிவிட்டால் எஞ்சி நிற்பது ஸ்போடமாகும். இப்போது சப்தம அல்லது தொனியை ஆராய்வோம். ஒவ்வொரு சப்தமும் ஒரு குறிப்பிட்ட கொள்கையை மாத்திரமே குறிததுக காட்டும். ஆதலால், எல்லாவித கொள்கைகளின (மறறு பாவனைகளின) சமஷ்டியாக இருக்கும் ஸ்போடததை விளககப் பல சப்தஙகளும் தகுதியுடையவனல்ல. ஒவ்வொரு கொள்கையைமாத்திரமே குறிக்கும சப்தங்களைககொண்டு ஸ்போடததை அறிய முயற்சி செய்தால் அநத ஸ்போடம் சமஷ்டி பாவனையாக இருக்கச் சகதி

யற்றுக் குறுகிய நிலைக்கு வநதுவிடும். ஆதலால், சிறிதளவு கூடக குறைவுபடுத்தாமல் அதன் வியாபகததனமையை அப்படியே விளககிக காட்டததகக ஒரு சப்தம இன்ன தென்று காணல்வேண்டும. அப்போது அது ஸ்போடததைக குறிப்பதற்கு ஏற்றதாக ஆகும. ஓம் என்ற சப்தமே அவ்வித லட்சணங்களுடன் கூடியதென்று சாஸ்திரங்கள் தெரிவிக்கின்றன, அ உ ம் மூன்றும சேர்நதது ஓம் என்று உச்சரிககப்படுகிறது. இநத மூன்று எழுததுககளும சேர்ந்து உண்டாகும் சப்தமே எல்லா சப்தங்களுக்கும் பொதுவானதென்று சொலலிவிடலாம. அ என்ற அட்சரம் (எல்லா சப்தஙகளுக்கும் ஆதியாக) எதையும பிரித்துத தனியே காட்டாததாய் இருக்கிறது. அதனுல்தான் "அட்சராணும் அகாரோஸ்மி" என்று ஸ்ரீ கிருஷ்ணபகவான் கீதையில் கூறியிருககிருர். வாககினுல் உச்சரிககப்படும் தொனியெல்லாம் நாககின் அடிப்பாகத்திலிருந்து உதடுகள் வரையிலுமுள்ள இடததில் ஏற்படுகின்றன. அடிப்பாகததில் ஏறபடும் தொனி அ எனபது. ம் என்பது உதடுகளில் வெளிப்படும முடிவான தொனியாகும. நாக்கின் அடிப்பாகததில் ஏற்படும சபததைத உதடுகள் வரையில் உருட்டிச செலல செய்யும முயற்சிகளையெல்லாம் உ எனற தொனி விளக்கிக் காட்டும் என்று சொலலலாம். ஆதலால், ஓம் என்பதை ஒழுஙகாக உசசரிததால், இநதத தொனியை எவ்வித சப்தததிற்கும பிரதிநிதியாகக கூற முடியும. வேறு எதுவும இவவளவு தெளிவாக எல்லா சப்தங்களையும ஏற்றுககொள்ளாது. ஆதலால், ஸ்போடத்தைக குறிப்பதற்கு ஏற்ற அடையாளமாக இநத சப்தம் அமைநதிருக்கிறது. ஸ்போடமென்ற வார்ததை எநதப் பாவனையைக குறிககிறதோ அதுவே ஓம் என்பதன் சத்தியப் பொருளாகும். சப்தத்தையும் அதனுல் குறிககப்படும விஷயததையும் பிரிகக முடியாததாதலால் ஓம் என்பதும் ஸ்போடமும் ஒன்றேயாகும. ஆதலால், ஸ்போடத்திற்கு நாத ப்ரம்மமென்று பெயர். இநத ஸ்போடம் ஸ்தூலப் பிரகிருதியின் சூட்சும பாகமாதலால் கடவுளின் சமீபததிலேயே

உள்ளது. மேலும், பிரமஞானத்தின் முதல் தோற்றம் (ஆவிர்பவம்) அதுவேயாதலால் ஓம் என்ற சப்தம் கடவுளை நிச்சயமாகக் குறிக்கிறதென்று சொல்லிவிடலாம். அகண்ட சச்சிதாநந்தமென்று சாஸ்திரங்களில் வர்ணிக்கப்பட்டுள்ள ஏகமேவ பிரமத்தை முக்தர்கள் அல்லாத ஜீவர்கள் முற்றிலும் அறிய முடியாது. அவர்கள் ஏதோ ஒரு நிலையில் நின்று தமக்குப் பிரத்தியேகமாக ஏற்பட்ட திருஷ்டியுடன் அதைக் காண்பார்கள். ஆதலால், அவர்களுக்கு அது சிற்சில லட்சணங்களுடன் விளங்கும். கடவுளின் சரீரம் என்று சொல்லத் தகும் ஜகத்து முழுமையும்கூட அவர்கள் முன் அவ்வாறே தோன்றும். அதாவது, சில விசேஷ குணங்களுடன் தோன்றும். கடவுளை வணங்கும் ஒருவனிடத்தில் (அவன் மனதில்) சத்வம், ரஜஸ், தமஸ் என்ற குணங்களில் எது அதிகம் வியாபித்திருக்கின்றதோ அதற்குத் தகுந்தபடி அவனால் பார்க்கப்படும் கடவுளும் ஜகத்தும் அமைந்து நிற்கும். ஆதலால், ஒரே கடவுள் பல பக்தர்களுக்குப் பற்பல குணங்களுடன் தோன்றுகிறார். இவற்றையெல்லாம் சோதித்தால் பல பக்தர்களுடைய கடவுள்களிடம் முரண்பட்ட குணங்களும் தோன்றக்கூடும். இதற்குக் காரணம் அவரவர்களுடைய மனோபாவனைகளேயாம். அதுபோலவே, ஒரே ஜகத்தில் தொடர்ச்சி எதுவும் இன்றி நாநாவித ரூபங்கள் அவர்கள் முன் தோன்றும். பேதமற்று ஜகத்பொதுவாக உள்ள ஓம் என்ற சப்தமும் அதன் உட்பொருளும் பிரிக்கமுடியாத ஏகமாக நிற்பதை நாம் கண்டோமல்லவா? அதுபோலவே கடவுள், ஜகத்து என்பதைப் பற்றிய பல வேறுகொள்கைகளிலும் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு சப்தம் பிரத்தியேகமாக இருக்கவேண்டும். அவ்வித சப்தங்களை ரிஷிகள் தம் ஆழ்ந்த ஆத்மானுபவ உணர்ச்சியின் பயனாகக் கண்டிருக்கிறார்கள். கடவுளையும் ஜகத்தையும்பற்றி அவர்களுடைய கொள்கைகள் எவைகளோ அவற்றை அந்த சப்தங்கள் கூடியவரையில் தெளிவாகக் காண்பிக்கின்றன. நிர்க்குணமாகிய அகண்ட பிரம்

மத்தை ஓங்கார தொனி காட்டி நிற்பதுபோலவே இந்த வெவ்வேறு சப்தஙகளும கடவுளைப்பற்றிய கண்டமான அல்லது குணசமபநதமான கொள்கைகளைக் குறித்துக் காட்டுகின்றன. கடவுளைத் தியானிப்பதற்கு இவைகளும் உதவி செய்யும. கடவுளையும் ஜகத்தையுமபற்றி வெவ்வேறு கொள்கைகளை உடைய அடியார்கள் மெய்ஞ்ஞானம் அடையவும் இவைகள் துணை செய்யும்.

ஏழாவது அதிகாரம்



# விக்கிரகாராதனையும், மற்றுள்ள பாவனைகளும்.



**பிரதீகங்கள்** என்றும் பிரதிமைகளென்றும் சொல்லப் படுவதைப்பற்றி இப்போது கவனிப்போம். கடவுள் ஸ்தானத்தில் வைத்து ஆராதிக்கத்தகுந்ததாகவும், முடிவில் கடவுளை அடைவதற்குச் சாதனங்களாகவும் இருப்பவை பிரதீகங்களென்று சொல்லப்படும். விக்கிரகங்களுக்குப் பிரதிமைகளென்று பெயர். பிரதீகோபாசனை மூலமாகக் கடவுளை வணங்குவதென்றால் என்ன? சத்தியமான பிரம்மத்தைத் தேடியடையும் வரையில் பிரம்மமல்லாத ஒரு வஸ்துவைப் பிரம்மமெனப் பாவித்துப் அதனுடன் மனதைஒன்றுபடுத்துவது பிரதீகோபாசனையென்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. "மனதைப் பிரம்மமென்று வணங்கு என்று சொல்வது அந்தப் பிரதீகத்திற்கு, ஆகாசம் பிரம்மமென்பது வெளிப்பிரதீகம்" என்று பகவான் ராமானுஜர் சொல்லியிருக்கிறார். மனமே அந்தப் பிரதீகம் என்றும், ஆகாசம் வெளிப்பிரதீகமென்றும் கருத்து. இந்த இரண்டும் கடவுள் ஸ்தானத்தில் வைத்து ஆராதிக்கத் தகுந்தவைகளே. இதேமாதிரி சங்கரர் சொல்வதைக் கேளுங்கள்:—"சூர்யன் பிரம்மமாகும்; இதுவே கட்டளை. நாமம் (சப்தம) பிரம்மமென்று ஆராதிப்பவன். இவ்வித வாக்கியங்களில் பிரதீகோபாசனைகளைப் பற்றிய விஷயம் விளக்கப்படுகிறது." பிரதீகம் என்றால் 'நோக்கிச் செல்வது' என்று பொருள். பிரதீகோபாசனை என்றால் பிரம்மத்தை நேரில் ஆராதிப்பதற்குப் பதில் வேறொரு சாதனத்தைக்கொண்டு ஆராதிப்பது என்று கருத்து. இந்தச் சாதனப்பொருள் சில விஷயங்களில் பிரம்மத்தை ஒத்திரு

க்குமேயன்றி முறறிலும் அதற்குச் சமமாக இராது. சுருதி அலலது வேதஙகளில் சொல்லப்பட்ட பிரதீகங்களைத் தவிர வேறு சிலவும புராணங்களிலும் தநதிரங்களிலும் காணப் படுகின்றன. பிதிராதேவதைகளையும் தேவர்களையும் ஆராதிப் பதைககூடப பிரதீகாராதனையில் சாஸ்திரங்கள் சேர்த்திருக் கின்றன.

இப்போது பகதி என்பதென்ன என்று கவனிப் போம். ஈசன் அல்லது கடவுளை ஆராதிப்பது மாத்திரமே பகதியென்று சொல்லப்படும். தேவர், பிதிருக்கள்முதலிய வேறு எவ்வித தெய்வததை வணங்கினாலும அது பகதி யாகாது தேவர்களை வணங்கும பலவித ஆராதனைகளும் கிரியா பாகங்களடங்கிய கர்மகாண்டததில் சேர்ககப்பட வேண்டும. ஆராதிககும் ஜீவனுககு ஏதேனும சுவர்க்கானு பவததைதத தருவதறகு அவை உதவும. கடவுளிடம ஆழ்நத பகதியை உண்டாககவாவது சர்வ பநத நிவிர்த்தியாகிய முகதியைத்தாவாவது அவை உதவமாட்டா. ஆதலால், ஒரு விஷயததை நாம மறவாமல் கவனிககவேண்டும. பிரீதிகா ராதனைகளில் சில சமயம தவறுகள் ஏற்படலாம். அதி உன் னதமான தத்துவ பாவனையாகிய பரப்பிரம்ம சொரூபத தைப பிரதீகபாவனைககுச்சமமாகக கீழே இழுதது இவ்வித (கீழ்ததர) பிரதிபொருளாகவே பிரம்மத்தைக் கருதி அதை ஆராதிககும ஜீவன் அதையே தன அநதர்யாமியாக நினைததுவிடக்கூடும. இவவாறு தனனுள் நினறு சகலத் தையும் நடததிவைக்கும ஆத்மசொரூபம இநதப் பிரதீக மெனறே ஒருவன் நினைத்துவிட்டால் அவன் தவறான வழி யில் நடப்பவனாகிறான். எவ்வித பிரதீகமும ஆத்மசொரூப மாக ஆக முடியாது. உண்மையான தெய்வவழிபாடு பின் வருமாறு:—பிரமமசொரூபததையே வணங்கி உபாசிக்க விரும்பி அவ்வித அகண்ட சொரூபத்தை — எங்கும் நிறைந்த பிரமமததை—பிரதீகததின் மூலமாக ஆராதிதது, பிரதீகததினிடம ஜகத்காரண சொரூபததைக் கற்பித்து, பிரம்ம சாட்சாத்கார மடைவதற்கு இவ்வித உபாசனையைச்

சாதனமாக உபயோகித்தால அது நன்மையைச் செய்து விடும். தெய்வ ஆராதனையில் ஆரமப நிலையைத்தாண்டி அப்பால் செல்லாதவர்களுக்கெல்லாம் இவ்வித வழிபாடு அவசியம் வேண்டிய சாதனமாகும். இநதச் சாதனமில்லாமல் மனிதர்கள் மேலான நிலைக்கு எழும்பவும முடியாது.

ஆதலால், இப்போது விளங்குவதென்ன? தேவர்களையோ அல்லது வேறு சொரூபங்களையோ பிரததியேகமாகப் பாவனை செய்து அவ்வித சொரூபங்களை மாத்திரமே வணங்கிவநதால் அவ் வணக்கம் கிரியாபாகங்க ளடங்கிய காமாவாகிறது. அதுவே ஒரு வித்தை அல்லது கலை என்று சொல்லப்படும். இவ்வித விததியாப்பியாசம செய்தால் அநத வித்தைக்குரிய பலன் கிடைத்துவிடும். அப்படிககின்றி அதே தேவர்களையும் மற்ற சொரூபங்களையும பிரம்மமாகவே பாவித்து வணங்கிவந்தால், அப்போது சர்வேஸ்வானை ஆராதிப்பதால் ஏற்படும் பலனே நமககுக கிடைககும். இதனாலேதான் சுருதிகளிலும் ஸ்மிருதிகளிலும் ஒரு கடவுள் அல்லது ஒரு ரிஷியை எடுத்துககொண்டு—அல்லது வேறு அரிய சகதி சொரூபத்தை எடுத்துககொண்டு-அதன் தனி சொரூபத்திறகு அப்பால் மேலே அதை ஏற்றி வர்ணித்து, பிரம்ம சொரூபமாகவே அதைப்பாவித்தபின் அநதச் சொரூபத்தைப் பிரமமமாகவே உபாசிக்கின்ற விவரங்கள் காணப்படுகின்றன. இதை விளக்கிக்கூற விரும்புகிற அத்வைதி: "நாம ரூபங்களை நீக்கிப் பார்த்தால் சர்வமும பிரமமமல்லவா?" என்கிறான். "கடவுள் ஒவ்வொருவரிடமும அநதர்யாமியாகிய ஆத்ம சொரூபமல்லவா?" என்று விசிஷ்டாத்வைதி சொல்கிறான். சங்கரர் சொல்வதைக் கேளுங்கள்:—"ஆதித்யாதி தேவர்களை உபாசிப்பதன் பயனாக வரும பலத்தையும் பிரம்மசொரூபமாகிய கடவுளே கொடுக்கிறான்; ஏனெனில், அவனே சர்வத்தையும் ஆட்சி செலுத்துகிறவன் அல்லவா? இவ்விதம் பிரம்மமே ஆராதிக்கப்படும் விஷயரூபமாகவும் ஆகிறான்; எப்படியெனில், விஷ்ணுமுதலிய தேவர்

களை விக்கிரகங்களின்மீது ஏற்றியிருப்பதுபோல் ஒவ்வொரு வஸ்துவிலும் தானேயோ அல்லது தன் பிரகிருதியினாலோ வியாபித்திருக்கும் பிரம்மத்தையும் பிரதீகோபாசனையில் பிரதீகங்களின்மீது ஏற்றுகிறார்கள்."

மேலே சொல்லிய கொள்கைகள் பிரதிமைகள் அல்லது விக்கிரகங்களை ஆராதிக்கும் பாவனைகளுக்கும் பொருந்தும். அதாவது எப்படியெனில், விக்கிரகங்கள் ஒரு தெய்வத்தையோ அல்லது முனிவரையோ மாத்திரம் குறிக்கும்போது அந்த ஆராதனம் பக்தியாக மாறி விடுதலைக்கு வழி காட்டாது. விக்கிரகம் ஏகமாகிய கடவுளைக்குறித்து நிற்கும்போது அதை வணங்குவது பக்தி, முக்தி என்னுமிரண்டையும் கொடுத்துவிடும். உலகத்தில் வழங்கும் முக்கியமான மதங்களில் வேதாந்தமதமும், பௌத்தமதமும், கிறிஸ்தவ மதத்தில் சில குறிப்பிட்ட பிரிவுகளும், பக்தர்களுக்குச் சாதகமாக விக்கிரகங்களை மேற்சொல்லிய வழிகளில் தாராளமாகவே உபயோகிக்கின்றன. முகம்மதியமதம், புராடெஸ்டெண்டு மதம் என்ற இரண்டு வகுப்புக்கள் மாத்திரம் விக்கிரகங்களின் உதவியை ஏற்றுக்கொள்ள மறுக்கின்றன. ஆனால், முகம்மதியர்கள் தம் முனிவர்களுடைய சமாதிகளை விக்கிரகங்களை உபயோகிக்கவேண்டிய விதமாக உபயோகிக்கிறார்கள். புராடஸ்டெண்டு மதத்தினர் மாத்திரம் ஆத்ம வழிக்கு இவ்வித ஸ்தூல உதவிகளையெல்லாம் அடியுடன் மறுத்துவிடுகிறார்கள். அதனால் அவர்கள் நாளடைவில் ஆத்மப்பயிற்சியினின்று எட்டித தூரத்தில் போய்க்கொண்டே இருந்தார்கள். அதன் பயனை இப்போது அவர்களுக்கும், சன்மார்க்க போதனைகள்மாத்திரமே செய்யும் நாஸ்திகருக்கும் அதிகபேதமே கிடையாது.

கிறிஸ்தவமதத்திலும் முகம்மதியமதத்திலும் இப்போது எஞ்சிநிற்கும் விக்கிராராதனை கூடப் பிரதீகங்களையும் பிரதிமைகளையும் அப்படியே-மேலான கடவுள் சாட்சாத்காரத்திற்கல்லாமல்-வணங்கி உபாசிப்பதற்குச்சமமாக இருக்கின்றது. ஆதலால், கிரியைகளுடன் கூடிய கர்மாவுக்குச் சமமாக அது

எ-வது அதி.—விக்கிரகாராதனையும், ருரு மற்றுமுள்ள பாவனைகளும்.

நிற்கின்றதேயல்லாமல்பக்தியையும் முக்தியையும் கொடுக்கக் கூடிய சாதனமாக இருக்கவில்லை இவ்வித விக்கிரகாராதனையில் ஜீவாத்மன் பரமபொருளாகிய ஈஸ்வரனிடம் செலுத்தப்படாமல் வேறு வஸ்துக்களிடம் செலுத்தப்படுகிறது ஆதலால், விக்கிரகங்களையும், சமாதிகளையும், கோவில்களையும், மற்றுமுள்ளவைகளையும் இவ்விதம் உபயோகிப்பதுதான் உண்மையான விக்கிரகாராதனையாகும். அப்படியிருந்தும் அவை தீயசெயல்களல்ல, பாவம் பொருந்தியவைகளுமல்ல. ஒரு கிரியையுடன் கூடிய கர்மா என்று அதைச் சொல்லலாம். உபாசிக்கின்றவர்கள் அதன் பயனை அவசியம் அடைந்தேதீருவார்கள்.

## எட்டாவது அதிகாரம்

# குறிப்பிட்ட லட்சியங்கள்

அவரவர்களுக்கு ஏற்பட்ட லட்சியத்தினிடம் மனதைச் செலுத்துவது என்று பொருள்படுகிற இஷ்ட நிஷ்டை என்றால் என்ன என்று இப்போது கவனிக்க வேண்டும். தெய்வ பக்தனாக ஆகவேண்டும் என்று விரும்புகிறவன் அறியவேண்டிய தொன்றுண்டு. கடவுளை வணங்குவதற்கு ஏற்பட்ட வழிகளில் பல அபிப்பிராயங்களும் பல கொள்கைகளும் அவ்வளவு மார்க்கங்கள் என்று நினைக்க வேண்டும். பலவேறு மதங்களின் பல உள்மதங்களும் ஒரே கடவுளின் பல ஆவிர்ப்பவங்களென்று பக்தன் அறிந்து கொள்ளவேண்டும். "உனக்குப் பல பெயர்களை ஜனங்கள் வழங்குகிறார்கள். பலவேறு பெயர்களால் உன்னை அவர்கள் பங்கிட்டுக்கொண்டதுபோலத் தோன்றினும் ஒவ்வொரு பெயருக்குள்ளும் உனது சர்வ சக்தித்துவம் விளங்குகிறது. ஒவ்வொரு பெயருடன் கூடிய வழியின் மூலமாகவும் ஆராதிக்கும் பக்தனை நீ அடைகிறாய். ஜீவனுக்கு உன்னிடம் ஆழ்ந்த பக்தி இருக்கும்வரையில் உனது நாமத்தைத் தியானிப்பதற்குக் கால நியமமும் ஏற்பாடு செய்தவரில்லை. உன்னை அடைவதும் மிக இலகுவான காரியமென்றே சொல்லலாம். அப்படிப்பட்ட லட்சணங்களையுடைய ஏ! பிரபுவே! உன்னிடம் பக்தி செலுத்த முடியாதவனாயிருப்பது எனது துர்ப்பாக்கியமேயல்லவா?"

இவ்வளவு மாத்திரமல்ல, பல மதஸ்தாபகர்களையும் பக்தியுடன் கூடியவன் துவேஷிக்கலாகாது. ஞான ஒளி பொருந்திய மகான்களாகிய அவர்களை எவ்விதத்திலும் குறைகூறவும் கூடாது. பிறர் குறைகூறத் தாம் கேட்பதுங்

தவறு. இவ்வாறு அளவுகடந்த அனுதாபமும் தாராளச் சிந்தையும் பொருந்தப்பெற்று ஆழ்ந்த பக்தியும் சேர்ந்து விளங்குவது மிக அருமையாக இருக்கிறது. அந்நிய மதத்தினிடம் மதிப்பும் தமது இஷ்ட தெய்வத்தினிடம் ஆழ்ந்த பக்தியும் சேர்ந்து ஒருவரிடம் விளங்குவது மிக அருமையாகவே இருக்கின்றது. அப்படிப்பட்ட குணம் பொருந்தியவர்கள் மிகச் சிலரேயாவர். மிகத் தாராள கொள்கையும் விரிவான அனுதாபமும் நிரம்பிய மதங்கள் சாதாரணமாக ஆழ்ந்த ஆதமானுபவமில்லாதவைகளா யிருக்கின்றன. இவ்வித மதஸ்தர்களுக்கு மதமும் அரசியல் சங்கம், சமூக சீர்திருத்த சங்கம்போன்ற ஒருவித சங்கமாக ஆகிவிடுகின்றது. மிகக் குறுகிய கொள்கையையுடைய மதங்களோ தமது லட்சியங்களிடம் மிகத் தீவிரமான பக்தியைச் செலுத்துகின்றன. ஆனால், இவ்வித ஆழ்ந்த பக்தியில் ஒவ்வொரு படியும் வேற்று மதங்களிடம் பேதபுத்தி செலுத்தியே வளர்ந்ததாக இருக்கின்றது. இந்த மதஸ்தர்கள் தம் அபிப்பிராயங்களுக்கு மாறுபட்ட கொள்கையை யுடையவர்களிடம் விரோத பாவனையையே கொள்கிறார்கள். உலக முழுமையும் நிறைந்து பரவிய அனுதாபமும் அவ்வளவுக்கவ்வளவு ஆழ்ந்து விளங்கும் பக்தியும் ஒருங்கே அமைந்த மனிதர்கள் உலகில் நிறைந்திருக்குமாறு கடவுள் கருணை செய்யலாகாதோ! இப்படிப்பட்ட ஜீவர்கள் எதோ ஒரு காலத்தில் மிக அருமையாகவே விளங்குகிறவர்களாய் இருக்கிறார்கள். ஆனால், இவ்வித நிலைக்கு வருமாறு ஏராளமான ஜனங்களுக்கு வழிகாட்ட முடியும். அந்த வழிதான் இஷ்ட நிஷ்டை என்று வழங்குகிறது; அதாவது, குறிப்பிட்ட ஒரு லட்சியத்தினிடம் மனதைச் செலுத்தி நிறுத்துவது. ஒவ்வொரு மதத்திலும் விளங்கும் பல உட்பிரிவுகளில் ஒவ்வொன்றும் மானிட உலகிற்கு ஒவ்வொரு லட்சியத்தையே கொடுக்கின்றது. நித்தியமாக உள்ள வேதாந்தமதம் மாத்திரம் அவ்வாறு இல்லாமல், தெய்வசொரூபத்திற்குள் செல்வதற்குக் கணக்கில்லாத வழிகளைக் காட்டி நிற்கிறது. நித்தியமான ஏக வஸ்துவின் ஆவிர்ப்பவமாக மாத்திரமே இருக்கும் வழி

கள் வேதாந்த மதத்தில் கணக்கின்றிக் காணப்படுகின்றன. ஒவ்வொரு வழியும் எப்படி யுண்டாயின என்பதைக் கவனியுங்கள்.

மனிதவாழ்க்கையின் சத்தியமான அனுபவங்களென்ற உறுதியான பாறையின்மீது ஞானஒளி பொருந்திய மகான்கள் செதுக்கிய ரஸ்தாக்களை, கடவுளே இங்கு இவ் வுலகில் ஆவிர்ப்பவித்திருக்கிறார் என்று சொல்லத்தக்க பெருமை வாய்ந்த பூர்வகாலங்களிலும இக்காலத்திலும் விளங்கும் பெரியோர்கள் கண்டுபிடித்த வழிகளை—முக்தியடைய விரும்பும் மக்களுக்கு, ஆடவர் பெண்டிர் முதலிய பலருக்கும்—வேதாந்தமதம மிகுந்த கருணையுடன் எடுத்துக் காட்டி சத் சித ஆனந்த சொரூபத்தினிடம எல்லோரும வாருங்கள் என்று கைகளை நீட்டி எதிர்கொண் டழைக்கின்றது. அந்தச் சொரூபத்தினிடம சென்றபின் ஜீவன மாய வலையினின்று விடுபட்டுப பரிபூர்ண சுதந்திரத்தையும ஆநந்தத்தையும அடைகிறான்.

இவ்வாறு முக்திக்கு வழிகாட்டியாக நிற்கும பலவேறு ரஸ்தாக்களில் எந்த ஒன்றையும வெறுக்கலாகாதென்றும, அது தவறு என்று கண்டிக்கலாகாதென்றும் பக்தியோகமானது நமக்குக் கண்டிப்பாகக் கட்டளையிடுகிறது. ஆனால், சிறு செடிகள் மரமாக வளர்வதற்குமுன் அவற்றைக் காத்து ரட்சிக்குமாறு வேலிகளைக் கட்டுகிறோமல்லவா? அது போலவே, அடிக்கடி கொளகைகளும் லட்சியங்களும் மாறிக் கொண்டே யிருக்குமாறு ஆரம்பத்திலேயே விட்டுவிட்டால் ஆத்மப்பயிற்சியென்ற இளஞ்செடி நசித்துப்போய்விடும. ஆத்மதர்ம விஷயத்தில் தாராள நோக்கத்தைக் காட்ட விரும்புகின்ற பலர் எவ்விதம நடக்கின்றார்களென்று கவனியுங்கள். ஒன்றன்பின ஒன்றாகப பல லட்சியங்களை விடாமல் பற்றிக்கொண்டு வீண்பொழுது போக்குகின்றவர்களாகப் பலரைக் காணலாம். ஒரு லட்சியத்திலும ஆழ்ந்து மனத்தைச் செலுத்துவதில்லை. எப்போதும் புதிய விஷயங்களையே தேடி அலையும் சித்தம் அவர்களிடத்தில் ஒரு வியாதிபோல

ஆகிவிடுகிறது. எப்போதும் புதிது புதிதாக ஏதோ ஒருவித உணர்ச்சி ஏற்பட்டுக்கொண்டே இருக்கவேண்டும். ஒரு புதுவிஷயம் சிறிதுகாலத்திற்கு உணர்ச்சியை எழுப்பி உற்சாகமூட்டிவிட்டுப் பிறகு அடங்கிவிடுகிறது. மறுபடி வேறு ஒரு புதுவிஷயம் வேண்டியிருக்கிறது. இவ்விதம் ஆதமவித்தையுமகூட இவர்களுக்குப் புத்திமயகக்த்திற்கு வேண்டிய ஒருவகை அபினிபோல ஆகிவிடுகிறது; அவ்வளவில் அடங்கிவிடுவதால் உண்மையான ஆத்மபயிற்சியென்பது இவர்களிடம் ஏற்படக்காரணமில்லை. பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் சொல்வதைக் கேளுங்கள்:—"முத்துச்சிப்பிகளை உண்டாக்கும் பூச்சிகளைப்போல மற்றொருவகை மனிதர் உண்டு. இந்துதேசத்துக் கதையைக் கவனியுங்கள். கடலின் அடிவாரத்திலிருந்து சிப்பிப் பூச்சிகள் மேலே எழும்பித் தண்ணீரின் மேல் மட்டத்திற்கு வந்து காத்திருக்கும். ஸ்வாதி நட்சத்திரம் உச்சமாக இருக்கும்காலத்தில் மழைத்தண்ணீரை நேரே அடையவேண்டி இவ்வாறு அந்தப் பூச்சிகள் தம் ஓடுகளை தாராளமாகத் திறந்தபடியே அங்குமிங்கும் மிதந்துகொண்டிருக்கும். மழைத்தண்ணீரின் ஒரு துளியை அடைந்தவுடன் கடலில் அடிவாரத்திற்குச் சென்று அந்த ஆழத்திலேயே தங்கி அந்த மழைத்துளியை ஒரு அழகிய முத்தாகச் செய்துவிடுகிறது. அதுவரையில் சிப்பிப் பூச்சிகள் அடிவாரத்தைவிட்டு நீங்குவதில்லை."

இஷ்ட நிஷ்டை என்ற கொள்கையை எவ்வளவு தெளிவாகவும் அழகாகவும் விளக்கியிருக்கிறார் பாருங்கள்! மிகத் தேர்ந்த கவிகள் இதைக்காட்டிலும் பலமாகவும் அழகாகவும் வர்ணிக்கமாட்டார்கள் என்று சொல்லலாம். ஒரே லட்சியத்தினிடம் மனதைச் செலுத்துவதாகிய இந்த ஏக நிஷ்டை ஆத்மதர்ம வழியில் ஆரம்பநிலையில் உள்ளவருக்கு அத்தியாவசியமாயிருக்கிறது. ராமாயணத்தில் ஹனுமான் சொல்லியதுபோல் இந்த ஆரம்ப நிலையில் உள்ளவனும் சொல்லிக்கொள்ளவேண்டும். "ஸ்ரீதேவியின் தலைவராகிய கடவுளும் ஜானகி பிராட்டியின் தலைவரும் ஒரே

பரமபொருளின் ஆவிர்ப்பவங்கள் என்று எனக்குத் தெரியும்; சாரத்தில இரண்டு மூர்த்திகளும் ஒன்றுதான். அப்படி நானறிநதபோதிலும் கமலககண்ணனுகிய ஸ்ரீராம பிரானே எனககுச் சொநதமாகிய எல்லாமாகிறுன்." என்று ஹனுமான் தெரிவிததிருக்கிறுர்.

துளசிதாஸர் போதிதத வழியையாவது ஆரம்ப நிலேயிலுள்ள பகதன் பின்பற்றலாம். "எல்லோரிடத்திலுமுள்ள இனிமையை அடைநதுகொள்ளலாம்; எல்லோருடனும அமர்நது அவர்கள் சொல்லும் நாமங்களேயெல்லாம அங்கீகரித்து ஒவ்வொருவருககும ஆம் ஆம் என்று சொல்லலாம. ஆனுல், உனது நிலேயில், (லட்சியத்தில்) உறுதியாக நிற்பாயாக!"

இவ்வாறு பழகும பகதன் ஆரமப நிலேயிலிருநது, சிரத்தையுடன விளங்கி நடநதுவந்தால ஆத்மபபயிற்சி என்ற சிறிய விதநிலிருந்து மகததான ஒரு மரம் எழுமபிவிடும். இநதியாவில உள்ள ஆலவிருட்சம் நாலாபககங்களிலும் கிளேகள்மேல் கிளேகளாகப் படர்நது செழித்து எங்கு பார்த்தாலும விழுதுகளேயும இறக்கிகொண்டு பெருமையுடன விளங்கும். ஆத்மதாமமென்ற முழு விஸ்தீரணத்தையும தனககுள் அணேத்துககொண்டு விளஙகுமபோது இநத ஆதமசொரூபம மகததாகவே இருககுமல்லவா?

எநதக கடவுள் தன் வாழ்நாட்களில் எப்போதும் தன் லட்சியபபொருளாயமைநது விளங்கியதோ அதே கடவுள் பல மதஸ்தர்களுக்கும வெவ்வேறு லட்சியஙகளாக அமைநது அவர்களால் பல நாமரூபங்களில் ஆராதிக்கப்படுகிறுன என்று உண்மையான பகதன் முடிவில் அறிநது கொள்ளுகிறுன்.



## ஒன்பதாவது அதிகாரம்

# வழியும், சாதனப் பொருள்களும்.

**பக்தியோகத்தை** அனுஷ்டிக்கும் வழியையும அதற்கு வேண்டிய சாதனப்பொருள்களையுமபற்றிய பகவான் ராமானுஜர் வேதாநத சூததிர பாஷ்யத்தில் பின்வருமாறு எழுதியுள்ளார்:—"தத் பொருளாகிய (பிரமமம) விவேகததாலும, இச்சைகளை அடககியாளுவதாலும, விடாமுயற்சியாலும், கர்மாக்களின் மூலமாகவும, பரிசுதத குணததாலும, (மனோ) பலததாலும, அளவுகடநத உறசாகததைத் தணிப்பதாலும் அடையப்படுகிறது." உணவுப் பொருள்களில் பரிசுத்தமில்லாததைத் தள்ளிப் பரிசுத்த உணவைத தேர்ந்தெடுத்தலே விவேகமென்று ராமாநுஜர் கூறுகிறார். மூன்றுவித காரணங்களால் உணவுப்பொருளுககுப் பரிசுததககுறைவு ஏற்படுவதாக ராமானுஜா அபிபபிராயப்படுகிறார். உள்ளிப் பூண்டுமுதலிய சில வஸ்துககள் இயற்கையாகவே பரிசுதத குண மில்லாதவைகள். பிறகு துஷ்டர்கள் அல்லது பிரஷ்டர்கள் மூலமாகக் கிடைக்கும் உணவு அசுததமடைகிறது; இது இரண்டாவது வகை. இதற்குப் பிறகு மண், மயிர் முதலிய ஸ்தூலவஸ்துக்கள் விழுவதாலும் உணவுப்பொருள்கள் பரிசுதத மிழககின்றன. "ஆகாரம் சுத்தமாயிருந்தால் தேகத்திலுள்ள சத்துவகுணம சுத்தமாகிறது. மனதும் அப்போது பரிசுத்த குணமடைநது ஞாபகசக்தி உறுதியாக நிற்கிறது." என்று சுருதிகள் கூறுகின்றன.

தெய்வ பக்தர்களுக்கு எப்போதும் ஆகார நியமங்களும் மிக முக்கியமாகவே இருந்துவந்திருக்கிறது. பக்தியை அடிப்படையாகக் கொண்ட சில மதங்கள் இந்த நியமங்களை அளவுக்கு மீறிக் கொண்டாடுகின்றன. அதை

நாம் கவனிக்கவேண்டிய அவசியமில்லையானாலும் இவ் விஷயத்தில் ஆழ்ந்த உண்மையிருக்கிறதென்பதை மறுக்க முடியாது. சாங்கிய தத்துவத்தில் சொல்லியிருப்பதை நாம் கவனிக்கவேண்டும். சத்துவ ரஜஸ் தமஸ் குணங்கள் ஒத்துச் சமமாக நிற்கும்போது பிரகிருதி என்றும், பேதப்பட்டுக் கலங்கி நிற்கும் நிலையில் ஜகத் என்றும் ஆகின்றன. பிரகிருதியின் சாரமும் லட்சணமும் இந்த முக்குணங்களே யன்றி வேறல்ல. பிரகிருதியே சிருஷ்டிசக்தி யெனப்படும். ஒவ்வொரு மனித உருவமும் இந்தப் பிரகிருதிப் பொருளால் ஆக்கப்பட்டதுதான். ஆதலால், ஆத்மப்பயிற்சி விருத்தியாவதற்குச் சத்துவப்பொருள் அவசியமாயிருக்கிறது. சத்துவ ஆத்மப்பயிற்சியே ஏற்பட முடியாது. உணவுப் பொருள்களின் மூலமாகவே நாம் தேகத்திற்குள் அடையும் வஸ்துக்கள் நம் மனோநிலையை உண்டாக்குவதில் பெரும்பாலும் உதவுகின்றன. ஆதலால், நாம் உட்கொள்ளும் உணவு விஷயத்திலும் மிக ஜாக்கிரதை நமக்கு வேண்டியது அவசியமே. அளவுக்கு மீறி இந்தக் கொள்கையைச் சில சிஷர்கள் ஏற்றுக்கொண்டு வெறிபிடித்தலைவதற்கு ஆசாரியர்கள் காரணமாகமாட்டார்கள்.

ஆகாரத்தில் வேண்டிய ஜாக்கிரதை அல்லது விவேகமெல்லாம் மிக முக்கியமான விஷயமல்ல; இரண்டாம்படியிலுள்ளதுதான். மேலே ராமானுஜர் மேற்கோளாக எடுத்துக்காட்டிய உபநிஷத்து வாக்கியத்திற்குச் சங்கரர் தம் உபநிஷத் பாஷியத்தில் வேறுவிதமாகப் பொருள் கூறியிருக்கிறார். ஆஹாரம் என்ற பதத்திற்குச் சாதாரணமாகச் சொல்லப்படும் உணவு என்று பொருள் கொள்ளாமல் வேறு பொருளை அப் பதத்திற்குக் கொடுத்து அந்த வாக்கியத்தின் கருத்தையே சங்கரர் மாற்றிவிடுகிறார். "சேகரிக்கப்படுவது ஆஹாரம். பல இந்திரியங்களின் வழியாக அடையப்படும் அறிவுகளெல்லாம்—சப்தம், கந்தம் முதலிய உணர்ச்சிகள் எல்லாம்—மனதினால் ஒன்றுசேர்க்கப்பட்டு ஜீவனால் அனுபவிக்கப்படுகின்றன. இவ்வாறு இந்திரியங்களின் மூலமாக

அடையப்படும் அறிவைப் பரிசுத்தம் செய்வதுதான் ஆஹாரசுத்தி என்ற வாசகத்தால் குறிககப்படும் பொருள். ஆதலால், உலகில் உள்ள எல்லா விஷயங்களின் அறிவையும் அடைநது அவற்றினிடம் ராக, துவேஷ, மயக்கம் என்ற பற்று, வெறுப்பு, கலககம் முதலிய அழுககுகளை ஏற்ருமல் இருப்பதே ஆஹாரசுத்தி என்பதன் பொருளாம். ஆஹாரம் அல்லது அறிவு பரிசுத்தமாக்கப்பட்டவுடன், இநத அறிவு கள் போயடங்குமிடமாக விளங்கும் உள் கருவியாகிய அந் தக்கரணம் அல்லது மனஸில் உள்ள சத்வம் பரிசுத்த மாகின்றது. சதவம் பரிசுத்த மடைந்தவுடன் மெய்யறிவு நிரம்பி முன்னமே சாஸ்திரக்கல்வியின் மூலமாக அடையப் பட்ட ஏகமான அகண்ட சொரூபத்தினிடம் புத்தியானது விடாமல் லயிதது ஒன்றுபட்டு நிறகும. இவவித தியான பலம் ஏற்படுகிறது.”

சங்கரும் ராமானுஜரும் ஆஹாரம் என்ற பதத்திற் குக் கொடுததிருக்கும் பொருள்கள் பார்வைக்கு விரோத குணங்க ளுள்ளவைகளைப்போல் தோன்றினும் இரண் டும உண்மையும் அவசியமுமாக இருககின்றன. ஸ்தூல சரீரததை நிர்வகித்து அடககியாளுவதைககாட்டிலும சூக் கும சரீரத்தை அடக்கியாளுவது உயர்நத காரியமென்ப தில் சநதேக மிலலை. ஆனுல், சூககும சரீரததை நிரவகிக் கச் சக்தி யேற்படுவதற்கு ஸ்தூல தேகததை நிர்வகிப்பது மிகவும முக்கியமாயிருக்கிறது. ஆதலால், ஆரமப நிலையில் உள்ளவன் பக்தியோகத்தைப்பற்றித் தெரிவிக்கும சிறந்த ஆசாரியர்களிடமிருந்து பரம்பரையில் கிடைத்திருக்கும் ஆகார நியமங்களை நன்ருகக கவனிக்கவேண்டும். அந்த விதிகளை உணவுப்பொருள் சம்பநதப்பட்டவரையில் ஏற் றுககொள்ளவேண்டும. ஆனுல், இநதியாவில பல மதங்க ளும் இப்போது ஆதமதர்மததை அடுப்பங்கரைக்கு விரட்டி விட்டிருபபதுபோல் சாரமறற வெறிகொள்ளுவது பிரயோ ஜனமிலலை. ஆத்மதததுவததை நமபாத ஜடதததுவ வாதிக

னுக்கும் இவர்களுக்கும் பேதமே கிடையாது. இவ்வித ஆசாரம் ஞானமுமல்ல, பக்தியுமல்ல, கர்மாவுமல்ல. பைத்தியத்தில் இது ஒரு விசேஷகுணம் பொருந்திய பைத்தியமென்று கூறலாம். இவ்வித வெறிகளில் மனதை நிறுத்துகிறவர்கள் மேலான உலகமாகிய பிரமமலோகம் போவதற்குப் பதில் பைத்தியக்கார ஆஸ்பத்திரிகளுக்கே போய்ச் சேரக்கூடும். உணவுப்பொருள் ஆராய்ச்சி சிறிது தூரம் அவசியம் என்பது அறிவிற்குப் புலனாகும். இந்த ஆராய்ச்சியினால் மனம் ஒருவித உயர் நிலையை அடைவது போல் வேறெவ் வழியாலும் அடையாது.

அடுத்தபடியாகக் கவனிக்கவேண்டிய விஷயம் இச்சைகளை யடக்கியாளுவது. இந்திரிய விஷயங்களிடம் இடைவிடாது நம இந்திரியங்கள் செல்லாதவாறு தடை செய்யவேண்டும். அவற்றை யடக்கி ஒருவன் தன் ஸ்வாதீனமாகச் செய்துகொள்ளவேண்டும். ஆத்மப பயிற்சியில் இது ஒரு முக்கிய தாமமாக நிற்கிறது.

தன் மறுப்பு அல்லது தன்னைத் தானடக்குதல் இதன் பிறகு வருகிறது. இந்தப் பயிற்சிகளை அப்பியசித்துப் போராடினாலன்றிக் கடவுள் சாட்சாத்காரம் ஆரம்ப நிலையிலுள்ள பக்தனுக்கு ஏற்படாது. எப்போதும் கடவுளைப்பற்றிய நினைப்பே மனதில் இருக்கவேண்டும். ஆரம்பத்தில் எப்போதும் அவனைப்பற்றிச் சிந்திக்குமாறு மனதை நிர்ப்பந்தம் செய்ய முடியாது. ஆனால், அடிக்கடி முயற்சிசெய்தால் அவ்விதம நினைக்கும் சக்தியும் நமமிடம பலமாகிக் கொண்டே வரும். "ஏ கௌந்தேய! அப்பியாசத்தாலும் வைராக்கியமாகிற பற்றின்மையாலும மனம் அடக்கியாளப் படுகிறது." என்று கீதையில் ஸ்ரீ கிருஷ்ணபகவான் கூறியிருக்கிறார்.

மேலே சொல்லப்பட்ட குணங்களெல்லாம் பராபக்தி அடைவதற்கு முக்கியமாதலால் தெய்வபக்தன் அவற்றை அப்பியசிக்க வேண்டும். சில சாஸ்திரங்களில் சொல்லப்படும கர்மபாகங்கள் இவ் வுலகிலோ மறு உலகிலோ ஏற்படும்

## கூ-வது அதி.—வழியும், சாதனப் பொருள்களும்.



இந்திரிய சுகங்களுககாக மாததிரமே உபயோகமாகுமாத லால் பக்தன் அவறறை அப்பியசிக்கலாகாது. இநதக கர்ம பாகஙகளெல்லாம் ஒருவனுககுப் பநதத்தின்பேரில் பந்த மாக ஏற்பட்டு அவனைக் கடவுளிடம சேர்க்காமல் நெடுந தூரததே தள்ளிக்கொண்டு போகும. பஞ்ச மஹா யக்ஞங் களை மாத்திரம் பகதன் செய்யவேண்டும். மறறவைகளைப் பற்றிச் சிறிதும கவனிககவேண்டிய அவசிய மிலலை.

எதற்கும் மேம்பட்டதாகப் பரிசுத்தம் என்னும் குணம் பக்திக்கு அஸ்திவாரமாக நிற்கிறது. ஸ்தூலதேகத் தைச் சுத்தம் செய்துகொள்ளமுடியும்; உணவுப் பொருள் களையும் தேர்நதெடுக்க முடியும். இந்த இரண்டும இலகு வாகச் செய்துவிடலாம். ஆனால், அநதரங்க சுத்தம் என்ற மனஸ் சுத்தம் இல்லையென்றால் அந்த வெளிச சுத்தங்கள் எவ்வித பயனையும் அளிக்கா. பரிசுததம அடைவதற்கு ஸ்ரீராமானுஜர் அவசியமென்று தெரிவிககிற குணஙகளில் சததியம் என்ற உண்மையுடைமையும், ஆர்ஜவம் என்னும் சிரத்தையும், பிறருக்கு நன்மை புரிதலாகிய தயையும, மனோ வாக்குக் காயங்களால் பிறருக்குத தீங்கு செய்யாமலிருப்ப தாகிய அஹிம்ஸையும், பிறர் பொருளுககு இசசையின்மை யாகிய அபித்யையும,வீண் எண்ணங்களைச் சிந்திக்காமலிருத்த லும், பிறரிடமிருந்து தாம் அடைநத தீங்கைப்பற்றி நினைக் காமலிருப்பதும் சேர்ந்திருக்கின்றன. இந்தத் தொகுதி யில் முககியமாகக் கவனிககவேண்டியது அஹிம்ஸை என் பதேயாம. அதாவது, பிறருககு ஹிம்ஸை செய்யாமை. பகதன் எல்லாப் பிராணிகளிடததிலும் இந்தக் குணத்தை அப்பியசிக்கவேண்டும். இது அவனுககு நிர்ப்பநதமாக ஏற் பட்ட கடமை. 'மனிதர்களுககு ஹிம்ஸை செய்யாமல் மற்றப் பிராணிகளிடம் இரக்கமற்றிருப்பது' என்று சிலர் நினைப்பதும, மற்றும் சிலர் 'நாய்களையும் பூனைகளையும் காப் பாற்றி, எறும்புகளுக்கும் இனிய உணவு அளித்துப், பிறகு தம்மைப்போன்ற மனிதர்களை மிகக் கொடிய வழிகளில்

வருத்தலாம்' என்று நினைப்பதும அஹிம்ஸா தர்மமல்ல. உலகத்தில ஒவ்வொரு நல்ல கொள்கையும் இவ்வாறு மிகக் கொடிய வழியில் உபயோகமாகுமாறு இணங்குவது அதிசயிக்கத்தக்க விஷயமேயாகும். ஒரு நல்ல பழக்கத்தை அளவுக்கு மீறிக்கொண்டுபோய், விதியிலடங்கிய கருத்தை மறந்து அதன் எழுத்துக்களை மாத்திரம நாம உபயோகித்து வருமபோது, அந்த பழக்கம் நிச்சயமாகத தீமைகை விளைவித்துவிடுகிறது. இந்த அஹிமஸாதர்ம அப்பியாசத்திலும் இவ்வித கொடுமை யேற்படுவது மிகவும் வருநதத்தக்கது. மிதமிஞ்சிய கொள்கையை அனுஷ்டிக்கும துறவிகள் சில மதங்களில இருக்கிறார்கள். இவர்கள் தம தேகத்திலுள்ள கிருமிகள் இறநதுபோகுமேயென்று பயநது ஸ்நானம் செய்யமாட்டார்கள். இவ்வாறு இருப்பதால் தமமைப்போன்ற மனிதர்களுக்குச் சுகக்குறைவும வியாதியும் ஏற்படுமே என்று சிறிதும இவர்கள் யோசிப்பதில்லை. 'இவர்கள் வேதங்களை ஆதாரமாக உடைய மதத்தை (வேதாநத மதத்தை)ச் சேராதவர்கள்' என்று நினைக்கும் போது நாம் சிறிது ஆறுதல் அடையலாம்.

அஹிம்ஸா தர்மத்திற்கு லட்சணமென்ன? பொறாமையில்லாத குணமே இந்தத தர்மத்தை அப்பியசிப்பதற்குப் பயன். ஏதேனும் ஒரு சமயம ஏற்படும் வெளியிலோ, அல்லது மூடபக்தியாலோ, குருமார்கள் சொல்வதற்காகவோ, எநத மனிதனும ஒரு நற்காரியததைச் செய்துவிடக்கூடும், அல்லது ஒரு சிறந்த தானத்தைக கொடுத்துவிடுவான். ஆனால், எவரிடமும் பொறாமை கொள்ளாமலிருப்பவனே உண்மையில் மனித வர்க்கததினிடம அன்பு செலுத்துகிறவன். உலகில் பெரியோர்கள் என்று சொல்லப்படுகிறவர்களெல்லோரும் தம் பெயருக்காகவும் பெருமைக்காகவும் ஏதோ சொற்ப பொன்னுககாகவும் ஒருவர்மீதொருவர் பொறாமை கொள்வதை நாம் காண முடியும். ஒருவன் மாமிச உணவை நீக்கிச சைவம பாராட்டியபோதிலும், இவ்வித பொறாமை அவன் ஹிருதயத்தினிடம் குடிகொண்

டிருக்கும் வரையில், அஹிம்ஸா தர்மத்தில் பூர்த்தியடையும் நிலைக்கு வெகு தூரத்தே அவன் நிற்பவனாகிறான். பசுவும் ஆடும் மாமிசத்தைப் புசிப்பதில்லை. அதனால் அவைகள் யோகிகளாகவும் அஹிம்ஸா தர்மத்தை ஏற்றுக்கொண்டதாகவும் ஆயினவோ? மாமிச போஜனத்தை எந்த மூடனும் நீக்கிவிட முடியும். இந்தக் குணம் இவனை மேற்சொல்லிய மிருகங்களைக்காட்டிலும் உன்னத நிலைக்குக் கொண்டுவந்துவிட மாட்டாது. ஈவிரக்கமின்றி விதவைகளையும் அனாதைகளையும் ஏமாற்றிப் பணத்திற்காக மிகக்கொடிய செய்கைகளைச்செய்கின்றவன் சிறிதும் மாமிசம்உண்ணாமலிருந்தாலும் எந்த மிருகத்திற்கும் கீழானவனாகவே இருக்கிறான். எவன் ஹிருதயத்தில் எவருக்கும் தீங்கு செய்யும் எண்ணம் ஒருபோதும் இல்லாமலிருக்கிறதோ, தன் பெரிய விரோதிக்கும் நேரக்கூடிய சம்பத்தைக்கொண்டு எவன் சந்தோஷமடைகிறானோ அப்படிப்பட்ட மனிதன் உண்மையில் ஒரு பக்தனும் யோகியுமாகிறான். அப்படிப்பட்ட மனிதன் தினந்தோறும் பன்றி மாமிசத்தையே புசித்தபோதிலும் எல்லோருக்கும் ஆத்மவழியைக் காட்டும் குருவாகிறான். ஆதலால், வெளி அப்பியாசங்களெல்லாம் உள்ளே பரிசுத்த குணத்தை விர்த்தி செய்யும் சாதனங்கள் மாத்திரமேயென்பதை நாம் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும். வெளித்தோற்றங்களில் எல்லா விவரங்களையும் அனுசரிப்பது முடியாத காரியமாயிருக்கும்போது உள்ளே பரிசுத்த நிலையை அடைய மாத்திரம் முயற்சி செய்வது மிக நல்ல காரியம். ஆனால், உண்மையான தர்ம சாரமாகிய ஆத்மநிலையை மறந்து வெளியடையாளங்களில் ஒன்றையும் விடாமல் எல்லாவற்றையும் உயிரற்ற யந்திரங்கள்போல் இறுகத்தழுவிக்கொண்டு நிற்கும் மனிதனும் தேசசமூகமும் கஷ்டத்திற்குள்ளாவது நிச்சயம். உள்ளேயிருக்கும் உயிரைக் குறித்துக் காட்டும் அடையாளமாக உருவம் விளங்கினால் அதுவும் முக்கியமானதுதான். எப்போதாவது உள்ளேயிருக்கும் உயிர் ஸ்தானத்தை அந்த உருவம் தெரிவிக்கவில்லையா

ஞல், ஜீவஸ்வரூபத்தை விளக்காத உருவமென்று தோன்றி ஞல், அதை இரககமின்றி நாசம் செய்துவிடலாம்.

பக்தி யோகததை நிறை வேற்றுவதற்கு அடுத்த சாத னம ஆநவஸாத் என்று சொல்லப்படும் பலம். "பல மில் லாதவர்களால் ஆத்மநிலை அடைய முடியாது." என்று சுருதிகள் கூறுகின்றன. சரீரபலம் மனோபல மென்னும் இரண்டுவித பலஹீனங்களும இங்குச் சொல்லப்படுகின்றன. உறுதியும் பலமும உள்ளவர்களே மதவிஷயததிற்கு ஏற்ற மாணுக்கர்கள். அற்பமான சிறு பலவீனர்களால யாது செய்ய முடியும்? எந்த யோகத்தையும் அப்பியாசம செய் யும்போது சரீரத்திலும் மனதிலும் அடங்கிக் கிடக்கும சூக்கும சக்திகள் சிறிது எழும்பியவுடன் அவர்கள் தாங்க மாட்டாமல் சிதறிவிடுவார்கள். யௌவன புருஷரும் திட சரீரமுள்ளவரும் பலவான்களும் எவர்களோ அவர்களே வெற்றி பெறுவார்கள். மனோபலம் எவ்வளவு முக்கியமோ அவ்வளவு தேக பலமும் முககியமாகும். இநதிரியங்களை அடகக முயற்சிசெய்வதன் பயனுக ஏற்படும அதிர்சசியைப் பலமுள்ளவனே தாங்க முடியும். பகதனுக ஆகவேண்டும் என்று விரும்புகிறவன் பலமும் திட சரீரமும் உடையவனு யிருத்தல்வேண்டும். பலவீனர்கள் எநத யோகததை அப் பியாசம் செய்ய முயற்சி செய்தாலும் ஏதேனும் தீராத நோய் வாய்ப்படுவது அநேகமாக நிச்சயமென்றே சொல்ல லாம். ஆதலால், வேண்டுமென்றே சரீரத்திற்குப் பலவீன த்தை வரவழைப்பது ஆத்மப்பயிற்சியில் அபிவிருத்தியடை வதற்கு ஏற்ற காரியமல்ல.

மனோபல மில்லாதவர்களும் ஆத்மநிலையை அடைய முடியாது. பக்தனுக விரும்புகிறவன் உற்சாகத்துட னிருக்க வேண்டும். "ஒருபோதும் புன்சிரிப்புக கூடாது; முகத்தில் எப்போதும் இருள் அடர்ந்து நிற்கவேண்டும்; முகம் சுருங்கிவிடவேண்டும்; இதுவே மதவிஷயத்தில் சிரத்தை யுள்ளவர்களுடைய லட்சணம்" என்று பலர் நினைக்கிருர்கள். இவ்விதம் தேகம் பலம் குன்றி நீண்ட முகங்களுடன் கூடி

யவர்கள் வைத்தியர்களிடம் செல்லத் தகுதியுடையவர்கள் என்பதே எனது அபிப்பிராயம். அவர்கள் ஒருபோதும் யோகிகளாக முடியாது. உற்சாக மனத்துடன் கூடியவர்களே விடாமுயற்சியுடன் கூடியவர்களாவார்கள். ஆயிரம் கஷ்டங்களேற்பட்டாலும் அவற்றின் மூலமாக வழியைக் கண்டு பிடிப்பவர் பலமான மனமுள்ளவர்களாகவே இருக்க வேண்டும். எல்லாக் காரியங்களிலும மிகக்கஷ்டமான காரியமாகிய யோகாப்பியாசத்திற்கு எவ்வளவு பலம் வேண்டுமென்று சொல்லவும் வேண்டுமோ? மாய வலையிலிருந்து அந்த வலையைக் கிழித்துக்கொண்டு வழியை உண்டாக்க மகத்தான மனோ பலம் கொண்டவர்களே வேண்டும்.

ஆனால், அளவு கடந்த உற்சாகமும் கூடாது. அநுத்தர்ஷம் என்ற தர்மம் பக்தனிடம் இருககவேண்டும். அளவு கடந்த உற்சாகத்தால் தீர்க்கமான எண்ணங்கள் தடைப்படும. மனதினிடமுள்ள சக்திகள் சிதறிப்போகும். மனோ பலம் எவ்வளவுககெவ்வளவு திடமுள்ளதாக இருக்கின்றதோ அவவளவுககவ்வளவு வெறிகள் அடங்கிக கிடககும்; உணர்ச்சிகள் மிதமிஞசி எழும்பிவிடாமல் அடங்கிக கிடக்கும். ஆதலால், துககமான தோற்றம எவ்வளவு கெடுதலே விளைக்குமென்று சொன்னேமோ அதுபோலவே அளவு கடந்த உற்சாகமும் கெடுத்துவிடும். மனம் திடமாகவும் சமத்துவ நிலையுடன் கூடிய சாந்தமாகவும் இருந்தால் மாத்திரம் ஆத்மானுபவம் சாத்தியமாகும.

இவ்வாறு ஒருவன் கடவுளிடம் அன்பென்ற பக்தி செலுத்தக் கற்றுக்கொண்டு மேன்மேலும் எழவேண்டும். இதற்குத்தான் ஆரம்ப பக்தி என்று பொருள்கொண்ட கௌணபக்தி என்று பெயர்.



# இரண்டாம் பாகம்

# பராபக்தி



## முதலாவது அதிகாரம்



## ஆரம்ப சாதனமாகிய தியாகம்

இதுவரையில் ஆரம்ப பக்தியின் லட்சணத்தைப பற்றிச் சுருக்கமாகக் கூறி முடித்தோம். இப்போது பராபக்தி என்ற உன்னதமான தியானத்திற்குள் செல்ல வழி என்ன என்று அறியத் தயாராயிருக்கிறோம். ஆதலால், அநத உயர்நத தெய்வ வணக்கத்திற்கு முடிவான சாதன மென்ன வென்று இப்பொழுது ஆராய்நது பார்ப்போம். நாமங்களை உச்சரிப்பது, கர்ம பாகங்களைத் தழுவுவது, நாநா ரூபங்களைப் பாவனையால் வணங்குவது முதலிய ஆரமப அப்பியாசங்க ளெல்லாம் ஜீவனைப் பரிசுததம் செய்வதற்காக ஏற்பட்ட வைகளே என்பதை மறக்கலாகாது. பரிசுத்தம் செய்யக் கூடிய சாதனங்களுக்குள் மிகச் சிறநதது எது இல்லையானல் ஒருவனும் உன்னத தியானத்தில் நிலைக்க முடியாதோ அவ் வித சாதனம் தியாகமென்று சொல்லப்படும். தியாகமென்ற பெயரைக் கண்டு பலர் நடுங்கிவிடுகிறார்கள். ஆனல், அது இல்லாமல் எவ்வித ஆத்மதர்மவளர்ச்சியு மேற்படாது. எல்லா யோகங்களுக்கும் தியாகம் என்பது அவசியம். ஆத்மப் பயிற்சிகளுககெல்லாம் நடுநாயகமாகவும் ஆரம்பப்படி போலவும் அமைந்திருப்பது தியாகமென்ற நிலையேயாம். சுருக்கிச் சொல்வோமானல் மதமென்பதே தியாகத்தைத்

தவிர வேறில்லை. உலக விஷயங்களிலிருந்து ஜீவன் திரும்பி விஷய சொரூபமெல்லாம் போயடங்கும ஹிருதயஸ்தானத்தில் ஆழ்நது பார்க்க முயற்சி செய்யும்போது—எவ்வித மாகவோ ஸ்தூல ரூபததை அடைநதுவிட்ட ஜீவனுகிய மனிதன தான் இவ்விதம ஜடமாகவே ஆகிக்கொண்டு வருவதால் அழிநதுபோகவேண்டும் என அறிநது பிரகிருதியினின்றும தன முகததைத் திருப்பும்போது—தியாக சக்தியும உண்மையான ஆத்ம எழுசசியும் ஏற்படுகிறது. தன் செய்கைகளின் பயனகளை விட்டுவிடுதல்—அதாவது, தன் ஊழியததின பயனுககு கிடைப்பதிலும் பற்றுவைககாம லிருத்தல்—இதுவே கர்மயோகியின தியாகநிலை. கர்மயோகி இவ் வுலகததிலும மறு உலகத்திலும தான் எவ்வித பயனையும அடைய விருமபமாட்டான. பிரகிருதி முழுமையும் ஜீவனுககு அனுபவம ஏற்படுவதற்காகவே உண்டாயிற்று என்பதும, நமது அனுபவங்களெலலாம பிரகிருதியினின்று தான் எப்போதும வேறு எனறு ஜீவன் அறிவதறகாக மாததிரமே உபயோகமுள்ளவை யென்பதும், தான் எப்போதும் ஆதமசொரூபி, ஜடத்துடன ஏற்படும் சம்பநதமெல்லாம சிறிது காலத்திற்கு மாததிரமே இருக்ககககூடியது எனறு நினைப்பதும ராஜயோகியின் லட்சணமாகும. ஆதலால், பிரகிருதியினிடம தனககு நேரே ஏற்படும அனுபவததைக் கொண்டுராஜயோகி தியாக மென்னும் பாடத்தைப் படிககிறுன் ஞானயோகியின நிலைமை வெகு கடினம். ஸ்தூலமாகத தோனறும இநதப பிரகிருதி முழுவதும மாயாசொரூபமெனறு ஞானயோகி ஆரமபத்திலிருநதே அனுபவிக்கவேண்டும். பிரகிருதியின்கண் தோன்றும் சகதி சொரூபங்களெல்லாம ஜீவனுககே சொந்தம், பிரகிருதிக்குச் சொநதமல்ல என்று அறியவேண்டும. சகல அறிவும அனுபவங்களும் பிரகிருதியி லில்லையென்றும், ஆத்மாவினிடமே உள்ளவையென்றும் அவன் ஆரமபத்திலிருநதே அறியவேண்டும. இவ்வாறு புததி பலததைக் கொண்டு மாததிரமே பிரகிருதியினிடம தான் பநதப்பட்

டிருக்கும நிலைமையைத் தெறித்துக்கொண்டு ஞானயோகி எழும்பவேண்டும. பிரகிருதி சம்பந்தமான விஷயங்க ளனைத்தும மறைந்துபோகுமாறு செய்து தான் மாத்திரமே எஞ்சி நிற்கிறுன்.

பலவிதமான தியாகங்களுள் பக்தியோகியின் தியாகமே இயற்கையாக அமையபபெறறு விளங்குவது. நமது பலத் தைககொண்டே—பலவந்தமாக—எதனிடமிருந்தும் நாம் ஒதுங்கவேண்டிய அவசியமே இங்குக கிடையாது. பக்த னுடைய தியாகம் இலகுவாயும, அமைதியாக விருத்தி யாகிககொண்டும, சுறறிலுமுள்ள பிரகிருதி வஸ்துக்களுடன் தானும இயல்பாகவே வளர்நதுகொண்டும் விளங்குகிறது. நம்மைச சுற்றிலும் தினநதோறும இவ்வித தியாகங்களின் சிதறுண்ட தோற்றங்களை நாம காண்கிறோம. ஒரு மனி தன் ஒரு ஸ்திரீயினிடம காதல் வைககிறுன. சிறிது காலத் திற்கெல்லாம மற்ெருருததியைக காதலித்து முதலில் காதல் கொண்டவளைத் துறந்து நழுவிவிடுகிறுன். இவள் அவன் மனதிலிருநது மெதுவாக நழுவிவிடுகிறுள். இதே மாதிரி ஒரு பெண் ஒருவனை இசசிககிறுள். பிறகு மற் ெருருவனிடம காதல் ஓடுகிறது. அப்போது முதல் மனி தன் அவள் மனததிலிருநது தானே நழுவிவிடுகிறுன். ஒரு வன் முதலில் தன நகரத்தினிடம் அனபு வைக்கிறுன்; பிறகு தன தேசததினிடம அன்பைச் செலுததுகிறுன். அப்போது அவனுக்குத் தன் நகரத்தினிடம் இருநத ஆழ்ந்த அன்பு சுலபமாகவே நழுவிவிடுகிறது. முடிவில் ஒருவன் உலக முழுமையிலும் தன அன்பு பரவுமாறு செய்யும் போது அவன் தன் தேசததினிடம வைத்திருநத வெறி கொண்ட தேசபகதியெல்லாம அவனுககு யாதொரு துன் பமுமின்றி நழுவிவிடுகிறது.

கல்விப்பயிற்சி யில்லாதவனுக்கு இநதிரிய விஷய சுகங்க ளில் ஆழ்நத ஆசை உண்டாகிறது. பிறகு கல்விப்பயிற்சி ஏற்படும்போது புத்தியினுல் அனுபவிககககூடிய சுகங்களில் அவன் இச்சை செலகிறது. இநதிரிய விஷயானுபவங்களின்

மகிமை குறைந்துபோகின்றது. ஒரு நாய் அல்லது ஓநாய் தன் உணவைப் புசிக்கும ஆவலுடன் ஒரு மனிதன் தன் உணவைச சாப்பிட முடியாது. அவ்வளவு பலமான இச்சா பூர்ததி மனிதனுக்கு உணவின் மூலமாக ஏற்பட முடியாது. அதுபோலவே, புததி வியவகாரங்களில் மனிதன் அடைகிற சுகங்களும் நாய்ககு ஒருபோதும கிடைககாது. முதல் முதல் கீழ்ப்பட்ட இநதிரிய விஷயங்களுடன் சுகம் என்பது இணைக்கப்பட்டிருககிறது. பிராணி உயர் நிலைக்கு எழும்பியபின் தாழ்நத சுகம் அதற்குப் பயன் தருவதில்லை. மனித வர்க்கததில் மிருகத்திற்குச் சமமாக இருக்கும் மனிதருககு இந்திரிய விஷய சுகங்கள் பலமாகத் தோன்றும். மேலான பயிற்சியை உடைய மனிதன் புத்தியின் மூலமாகவும மற்றுமுள்ள சூட்சுமவழியிலும் மேலான சுகத்தைக் காண்கிறான். அதுபோலவே, புததிக்கு மேம்பட்ட நிலையாகிய ஈசுவரானுக்கிரகம பொருந்திய ஆத்மநிலையை ஒரு மனிதன் அடைந்துவிட்டால் அங்கே அவன் ஒரு விநோதமான ஆநநதத்தை அனுபவிககிறான். அப்போது இந்திரிய விஷய சுகஙகளும, புத்தியின மூலமாக அடையப்படும் சுகங்களும இநதப் பேராநந்தததின் முன் சூன்யங்களாகின்றன. அவ்வித நிலை இயற்கையில் வந்து கூடுகிறது. சநதிரன பிரகாசமாக ஒளி வீசும்போது நட்சத்திரங்கள் மங்கிவிடுகினறன. சூரியன் பெருமையுடன் உதிக்கும்போது இநதச் சநதிரனும் தன் ஒளி மழுங்கி விளங்குகிறான்.

பக்தியை அடைய அவசியமான தியாகம் ஏற்படுவதற்கு நமமிடம உள்ள எதையும நாம நாசம செய்யவேண்டியதில்லை. அதிக பலமாகக் கிளம்பும் ஒளியின்முன் சொற்ப பலத்துடன்கூடிய வெளிச்சம மங்கிப்போவது போலவும், முடிவில் இந்த வெளிச்சமே மறைந்துவிடுவது போலவும் நமமிடம் பக்தி இயற்கையாகவே விர்த்தியாகி விடுகிறது. பக்தன் கடவுளிடம் செலுததுகிற தீவிர பக்தியின் முன் இநதிரிய விஷய சுகங்களும, புத்தியின் மூலமாக

அடையப்படும் சுகங்களும் குறுகிப்போய் முடிவில் நாச மாக்கப்படுகின்றன. அவ்வளவு தீவிரமாகக் கடவுள் பக்தி எழும்போது அதற்குப் பராபக்தி அல்லது உன்னத தியா னம் என்று பெயர். இவ்வித நிலைக்கு எழும்பிய மனிதனு க்கு ரூபங்களெல்லாம் மறைந்து போகின்றன. கிரியா பாகங்கள் இவனைவிட் டோடுகின்றன. புத்தகங்கள், விக் கிரகங்கள், கோயில்கள், மதங்கள், தேசங்கள், ஜாதிப் பிரி வினைகள் என்னும் பந்தங்களெல்லாம் தாமே நழுவிவிடுகின் றன. அவனுடைய சுதந்திரத்தைக் கட்டுப்படுத்தக்கூடிய எதுவும் மீதி யில்லை. கப்பல் சிதறிப்போவதைப்போல் அவனது பந்தங்கள் நீங்கிவிடுகின்றன. ஒரு காந்த மலையி னிடம் ஒரு கப்பல் திடீரென்று நெருங்கவே அக் கப்பலி லிருந்த இரும்புக் கம்பிகளும் ஆணிமுதலியவைகளும் தெறித்துவிட, பலகைகள் தனித்தனியே போய்விட்டன என்று ஒரு கதை சொல்வதுண்டு. அதுபோலவே, பக்த னுடைய ஜீவனைப் பிடித்துக் கட்டிவைத்துக்கொண்டிருக் கும் பந்தங்களெல்லாம் அப்போதே கடவுளின் கருணை யால் விடுபட்டுப் பிறகு ஜீவன் எப்போதும் சுதந்திரனாகி றான். ஆதலால், பக்தியின் முன் தோன்றுகிற தியாகத்தில் கஷ்டமெதுவும் கிடையாது; போராட்டம் செய்து முயற்சி செய்யவேண்டிய தேவையே இல்லை. எதையும் அடக்க வேண்டும் என்ற கஷ்டம் கிடையாது. தன் உணர்ச்சிகளை பக்தன் அடக்கிவிடவேண்டிய அவசியமே கிடையாது. அவற்றை யெல்லாம் பலமாக்கிக் கடவுளிடம் செலுத்தப் பழகவேண்டும்.



## இரண்டாவது அதிகாரம்

# உயர்ந்த அன்பின் மூலமாகவே தியாகம் ஏற்படுகிறது

பிரகிருதியெங்கும் அன்பின் வேலையை நாம் பார்க்கிறோம். சமூகத்தில் செய்யப்படும் நற்காரியங்களும் பெருமையும் கம்பீரத் தன்மையுமுள்ள காரியங்களும் அன்பின் வேலையாகவே இருக்கிறது. சமூகத்தில் கெட்டதும் மிகக் கொடியதுமாகத் தோன்றும் காரியங்களும் அதே அன்பின் சக்தியால் ஏற்பட்டவைகள். தம்பதிகளுக்குள் பரிசுத்தமான அன்பு ஒருவர்மீது மற்றொருவருக்கு ஏற்படுமாறு செய்ய எந்த உணர்ச்சி காரணமோ அதே உணர்ச்சிதான் மிகக் கீழ்த்தரமான இச்சைகளையும் பூர்த்திசெய்யக் காரணமாகிறது. உணர்ச்சி ஒன்றேயாயினும் இந்த இரண்டு இடங்களிலும் வெவ்வேறு விதங்களில் ஆவிர்ப்பவிக்கின்றது. ஒரு மனிதன் நன்மையையே செய்துகொண்டு தன்னிடம் இருப்பதையெல்லாம் ஏழைகளுக்குக் கொடுத்துவிடுகிறான். மற்றொருவன் தன் சகோதரர்களின் உயிர்களைக் கவர்ந்து அவர்களிடமுள்ள சொத்துக்களைப் பறிமுதல் செய்துகொள்கிறான். இரண்டு இடங்களிலும் உள்ள காரணம் ஒரே விதமான அன்புதான். கொள்ளையடிக்கின்றவன் தன்மீது எவ்வளவு அன்பைச் செலுத்திக்கொள்கிறானோ அவ்வளவு அன்பை நற்காரியம் செய்கிறவன் அந்நியர்மீது செலுத்துகிறான். கொள்ளையடிப்பவன் தவறான மார்க்கத்தில் தன் அன்பைச் செலுத்தியிருக்கிறான் என்றும், நன்மையைச்செய்கிறவன் ஒழுங்கான வழியில் அன்பைச் செலுத்தியிருக்கிறான் என்றும் சொல்வோம். சமையலுக்கு உதவி செய்யும் நெருப்பு, குழந்தையைச்

சுட்டுவிடுகிறது. அதற்காக நெருப்பின்மீது பிழை சொல்ல முடியுமோ? அந்த நெருப்பை உபயோகித்த விதம் தவறு என்று சொல்வது ஒழுங்கான சமாதானமல்லவா? இரண்டு மனிதர்களுக்குள் அவர்கள் சேர்ந்தே இருக்கவேண்டும் என்ற விருப்பம் பலமாக நிலைத்து ஊன்றிக்கொண்டால் அதுதான் அவர்களுக்குள் ஏற்படும் அன்பு என்று சொல்லப்படும். முடிவில் இந்த அன்பு எல்லாரையும் ஒன்றுபடுத்திவிடும். இதே விஷயத்தை நாம் மேலான நிலைகளிலும் கீழ்ப்பட்ட காரியங்களிலும் காண்கிறோம். உயர்ந்த அன்பைப்பற்றித் தெரிவிப்பது பக்தியோகம் என்ற சாஸ்திரம். 'உயர்ந்த அன்பை எவ்வாறு கையாளவேண்டும்? எதை நோக்கிச் செலுத்தவேண்டும்? புதிய லட்சியம் ஏற்படுத்தி அதை எப்படி உபயோகிக்கவேண்டும்? முடிவில் ஆத்மாநந்தம் அடைவதாகிய உன்னத பயனை எவ்வாறு அடையவேண்டும்?' என்ற விஷயங்கள் இந்த சாஸ்திரத்தில் தெளிவாக விளங்கும். "தியாகம் செய், விட்டுவிடு" என்று பக்தியோகம் சொல்லவேயில்லை. "அன்பைச் செலுத்து, உயர்ந்த லட்சியத்தினிடம் அன்பைச் செலுத்து" என்றுதான் அது தெரிவிக்கிறது. அன்பு செலுத்தப்பட்ட விஷயம் உன்னத நிலையிலுள்ளதானால் கீழ்ப்பட்ட விஷயங்களெல்லாம் கீழே விழுந்துவிடும்.

எல்லாக் காலங்களிலும் உண்மையான பக்தர்களின் ஹிருதயங்களிலிருந்து வெளிக் கிளம்பும் தொனி ஒரே மாதிரிதான் அமைந்திருக்கிறது. "கடவுளே! உன்னைப் பற்றி நான் எவ்வித வர்ணனையும் சொல்ல முடியாது. என் அன்பின் முதிர்ச்சியாகிய பக்திக்கு நீ விஷயமாகிறாய்; அவ்வளவே நான் சொல்ல முடியும். நீ மிக்க அழகுடையவன்; அழகு என்பதே உன் சொரூபம்!" இதுவே பக்தர்கள் இருக்கும் நிலை. ஆதலால், இந்த யோகத்தை அடைவதற்கு நாம் செய்யவேண்டியதெல்லாம் என்னவென்று கேட்டால், 'மிக்க அழகிய நிலை வேண்டும்' என்று நாம் விரும்பும் விருப்பத்தையெல்லாம் கடவுளையே நோக்கிச் செலுத்த

வேண்டும்; இதுதான் நாம செய்யவேண்டிய காரியம். ஒரு மனிதனுடைய முகததிலும், ஆகாயததிலும், நட்சத்திரங்களிடமும், சந்திரனிடத்தும் தோன்றும் அழகு என்னவென்று ஆராய்ந்து பாருங்கள். உண்மையாக எல்லா வஸ்துக்களையும அணைத்துககொண்டு விளங்கும் கடவுளின் வடிவத்தில் ஒரு சிறு பாகததையே நாம இவற்றில் காண்கிறோம. "அவனது பிரகாசத்தால் எல்லா வஸ்துக்களும் பிரகாசிககின்றன." என்று சாஸ்திரங்கள் கூறவில்லையா? அவனது ஜோதியைக்கொண்டே எல்லா வஸ்துககளும் பிரகாசிக்கின்றன. பக்தியோகம தெரிவிககிறபடி இந்த உன்னத பாவனையாகிய அழகை ஏற்றுககொள்ளுங்கள். குறுகிய வியஷ்டித தன்மைகளிடம் உங்கள் அன்பைச் செலுத்தி அவற்றையே விஷய சுகங்களாக அடைவதை மறந்துவிடுங்கள். தன்னலத்தை விளைவிப்பதாகிய சிறு உலக விஷயப் பற்றுகளிலிருந்து நீ உன்னை விடுவிததுக்கொள். உன் காரியங்களெல்லாம் இந்த மனிதவர்க்கததிடமே உண்டு என்ற பாவனையை ஒருபோதும கொள்ளவேண்டாம். ஒரு சாட்சி போலவே, அல்லது மாறுககளுகவே நின்று பிரகிருதியின் தோற்றஙகளைக் கவனிததுப் பார். ஒவ்வொரு மனிதனையும் பற்றின்மை என்ற உணர்சசியுடன் கவனித்துப் பார். அப்போது உலகில் அன்பென்ற மகத்தான உணர்ச்சி எவ்வளவு அழகாக வேலை செய்கிறதென்பது உனக்கு விளங்கும். சில வேளைகளில் சிறு சச்சரவு, சண்டை ஏற்பட்டுச் சிறிது தாழ்நதுபோவது கூடத் தோன்றக்கூடும். ஆனால், அதுவும்கூட உண்மையில் உயர்ந்த நிலையில் உள்ள அன்பினிடம் செல்வதற்கு ஏற்படும் போராட்டமெனத தெரிய வரும். தனியே நின்று இந்தப் போராட்டங்களெல்லாம் உன்னதமான அன்பை அடையுமாறு மனிதருக்கு வழி காட்டுவதைப் பாருங்கள். உலக சம்பந்தமான சுழலில் இருக்கும்போதுதான் ஒருவன் கஷ்டத்தை அனுபவிக்கிறான்; அவ்வித உணர்ச்சி உலக சம்பந்தமான விஷயங்களில்தான் உண்டு. அதை விட்டு வெளிப்பட்டு சாட்சி

யாக மாத்திரம் அல்லது மாணுக்கனுக மாத்திரம் இருநதால், ஆகா! எவ்வித காட்சி மனிதனுககுத்தென்படும். கோடானு கோடி வழிகளில் கடவுள் தன் அன்பின் வடிவத்தை ஆவிர்ப்பவிக்கச் செய்திருககிருர் என்பது விளங்கும்.

“எங்கேயாவது சிறிது ஆநந்தம் காணப்பட்டால், அது கடவுளின் சொரூபமாகவே உள்ள நித்யாநநதத்தின் ஒரு சிறு சுடர்.” கீழ்ப்பட்டதாகிய பற்று நிலேயிலும் கூட கடவுளின அன்பு சொரூபத்தின் விதையே தோன்று கிறது. ஸம்ஸ்கிருத்தில் கடவுளுக்கு ஹரி என்று பெயர் உண்டு. எல்லா விஷயங்களேயும தனக்குள் இழுத்துக் கொள்கிறவன் என்பது அநதப் பதத்தின் பொருள். மானிட ஹிருதயங்களேயும் தன்னிடம் இழுத்துக்கொள்ளத் தக்க புருஷன் அவர் ஒருவரே. ஒரு ஆத்மாவை அவரைத் தவிர வேறு எவர் இழுததுக்கொள்ளமுடியும்? அசேதன மாகிய ஜடப்பொருள் உண்மையில் ஒரு ஜீவாத்மாவை இழுத்துககொள்ள முடியுமென்று நினேக்கிறீாகளா? ஒரு போதும இவ்வாறு நோநததில்லே, இனியும் இவ்வாறு நேராது. அழகிய முகததைத் தேடிக்கொண்டு ஒரு மனி தன் போகிருன். அந்த முகததில உள்ள ஜட வஸ்துக்க ளின் ஒரு விதமான சேர்கையா இவனே இழுத்தது? இல்லவேயில்லே. அநத ஜடவஸ்துக்களேத் தாங்கிக கடவுள் சொரூபமும் அன்பின் சொரூபமும் அங்கு விளங்குகின் றன. அஞ்ஞானி இதை யறிவதில்லே. அப்படியிருநதும் அறிநதோ அறியாமலோ அநதப் பேரன்பு விளங்குமிடத் தையே அவன் பார்த்துக்கொண்டு நடக்கிருன். இவ்விதம் கீழ்ப்பட்ட பற்று நிலேக்கும் கடவுளின் சக்தியே காரண மாக ஜடவஸ்துக்களிலும் தோன்றுகிறது. “அன்பின் இருப்பிடமே! எந்த ஸ்திரீயும் புருஷனுக்காக மாத்திரமே புருஷனே இச்சிக்கவில்லே. அங்கு அந்தப் புருஷனிடம் உள்ளே அந்தர்யாமியாக விளங்கும் ஆத்மசொரூபமாகிய கடவுளுக்காக மாத்திரமே புருஷனிடம அன்பு செலுததப் படுகிறது.” அன்பு செலுத்தும் பெண்கள் இதை யறியா

மலுமிருக்கலாம். ஆனால், இவ்விஷயம மாத்திரம் உண்மை தான். "அன்பின் நிலேயே! மனைவியினிமித்தமாக எவரும மனைவியினிடம அன்பு செலுத்துவதில்லை. மனைவியினிடம் காணப்படும் ஆத்மசொரூபத்திற்காகவே அன்பு செலுத்தப்படுகிறது." இதுபோலவேதான் உலகில் ஒரு குழந்தையினிடமும் மற்றெந்த வஸ்துவினிடமும் மனிதன் அன்பைச் செலுத்துவதெல்லாம. உள்ளே அந்தர்யாமியாக விளங்கும் கடவுள் சொரூபத்திற்காகவே அன்பு செலுத்தப்படுகிறது. கடவுள் ஒரு பெரிய காந்தம்போலவும், நாமெல்லோரும் இரும்புத் தூள்கள் போலவும் இருக்கிறோம. எல்லோரும் எப்போதும் அவரால் இழுக்கப்படுகிறோம். அவரை நோக்கிச் செல்லவே முயற்சி செய்கிறோம். ஆமாம்! இது உண்மைதான். உலகில் நாம் படும் கஷ்டமெல்லாம் சுயநலத்திற்காக அல்ல. மூடர்கள், தாம் செய்வதை யறியமாட்டார்கள். அறியாவிட்டாலும் அவர்கள் செய்யும் முயற்சிகளும—வாழ்நாட்கள் முழுவதிலும் அவர்கள் அடையும் கஷ்டங்களெல்லாம்—அந்தப் பெரிய காந்தத்தினிடம நெருங்குவதற்காகவேயாம். முடிவில் கடவுளிடம நாம சென்று அவருடன் ஒன்முக ஆவதற்காகவே வாழ்க்கையில் நமக்கு ஏற்படும் போராட்டங்களெல்லாம் நடைபெறுகின்றன.

வாழ்க்கையிலேற்படும் போராட்டங்களின் உண்மையான பொருளும் அவற்றின் பயனும் இப்படிப்பட்டவையென்று பக்தியோகி மாத்திரமே அறிவான். நீண்ட காலப் போராட்டங்களை அவன் அனுபவித்திருக்கிறான். ஆதலால், அவற்றின் கருத்தை அவன் உள்ளபடி அறிந்து இப்போது அவற்றினின்றும் விடுதலைபடைய விரும்புகிறான். சிறு போராட்டங்களையெல்லாம் ஒழித்து, சகலத்தையும் வசீகரிக்கும பெரிய ஹரியினிடம் நேரே செல்ல இச்சிக்கிறான். கடவுள் அவனை மிகப் பலமாகத் தன்னிடம இழுப்பதால் மற்ற பற்றுக்களெல்லாம அவன்முன் இல்லையாகின்றன.

கடவுளிடம் செலுத்தப்பட்ட எல்லையில்லாத அன்பு குடி கொண்ட அவனது ஹிருதயத்தில் வேறெவ்வித சிறு அன் புக்கும இட மில்லை. வேறெவ்வித மிருக்க முடியும? கடவு ளின் சொரூபமாகவே இருக்கப்பட்ட அன்பென்னும் சமுததிரத்திலுள்ள திவ்ய தீர்த்தத்தால் அவனது ஹிருத யம் நிறைநதிருககிறது. பக்தி என்பது இவ்வாறு அநத ஹிருதயத்தை நிரபபிவிடுவதால் சிறு அன்புகளுக்கு அங்கு இட மில்லை. இதுவே பகதனுடைய தியாகம். கடவுளல் லாத இதர வஸ்துககளை யெல்லாம் பக்தன தியாகம் செய்து விடுகிறுன். இதற்குக் காரணம் கடவுளிடம அவனுக் கேற் படும் பெரிய பறருகிய அநுராகம் என்பதே. அவவித தியாக பலம் ஏற்படும்போது பராபக்தி என்ற உன்னத நிலைக்கு ஜீவன் செல்வதறகு வழி யேற்படுகிறது. அப் போது நாம உண்மையில் பகதியென்பது என்னவென்று அறிய முடியும். பராபக்தியின் அநதரங்க ஸ்தானத்தை அடைநத மனிதனதான் தன் ஆத்மதர்ம அனுபவங் களுக்கு நாநா ரூபங்களும் சாயைகளும பயன்படமாட்டா என்று சொல்வதற்கு உரிமை யெறறவனுவான. மனித வர்ககம் சகோதரததன்மையுடையது என்று அனுபவததா லறியக்கூடிய உனனதமான அன்பின் பீடத்தை அவனே அடைநதவனுகிறுன். மற்றவர்கள் சகோதரத்வத்தைப் பற்றிப் பேசுகிறவர்களே யாவர். அவ்வித பக்தன்மாத திரமே பேதங்களைக் காணுமலிருக்கிறுன். அன்பென்ற மகத்தான சாகரம் அவனுக்குள் புகுநதுகொண்டதன் பய னுக நாம் பார்ப்பதுபோலத் தினநதோறும் மனிதர்களை யும மிருகங்களையும் செடிகளையும் சூரிய சநதிர நட்சத்திரங் களையும அவன் காண்பதில்லை. அவனது பக்திக்கு இருப் பிடமாகிய வஸ்துவே எங்கும் எல்லா வஸ்துக்களிலும் இருப்பதாக அவனுக்குத் தோன்றும். அவனது ஹரி சொருபமே அவனுக்கு ஒவ்வொரு முகத்திலும் தென்படு கிறது. சூரியனது ஜோதியும் சநதிரனது ஒளியும் அநதக் கடவுளின் ஆவிர்ப்பவங்களாகவே அவனுக்குத் தோன்று கின்றன. ஆழ்ந்த பெருமைக்குணமும் அழகும் விளங்கு

## மூன்றாவது அதிகாரம்

# பக்தியோகத்தின் முக்கிய தத்துவம்

"உன்னையே இடைவிடாமல் சிலர் வணங்கிறார்கள். எப்போதும அவர்களுக்கு உன்னிடம மனம் செல்லுகின்றது. பேதமற்ற ஈஸ்வானையும பிரம்மத்தையும் மற்றும் சிலர் வணங்குகிறார்கள். இந்த இரண்டு பிரிவினர்களில் எவர்கள் சிறநத யோகிகள்?" என்று அர்ஜுனன ஸ்ரீ கிருஷ்ண பகவானைக கேட்டான். அதற்குப் பின்வரும் பதில் கிடைத்தது:—"என்னிடமே மனதைச் செலுததுகிறவர்களாய்த் தம் மனங்களை என்னிடம் ஏகாக்கிரம செய்து இடைவிடாமல் நித்யமாக என்னை வணங்குகிறவர்கள் எவரோ அவாகளே என்னை நன்றாக வணங்குகிறவர்கள்; அவர்களே சிறந்த யோகிகள். வாககுக்கெட்டாததும, தனிதத குணங்களறறதும், எங்கும் நிறைந்ததும், மனததாலும் நினைக்க முடியாததும, எல்லாவற்றையும் ஊடுருவிககொண்டு அசலமாக நிற்பதும், நித்யமான பிரம்மசொரூபமாயுள்ளதும் எதுவோ அநத வஸ்துவை இந்திரிய நிககிரகத்தாலும், எல்லா வஸ்துவும சமம என்ற நிச்சய புத்தியாலும், எல்லாப் பிராணிகளுககும நன்மை செய்வதன்மூலமாகவும் எவர்கள் வணங்குகிறார்களோ அப்படிப்பட்டவர்களும் என்னையடைகிறார்கள். ஆனால், தோற்றங்களாக வெளிப்படாத அகண்ட சொரூபததினிடம் பகதியைச் செலுத்திவிட்ட மனிதர்களுககு போராட்டம் மிகக் கடினமாக இருக்கும். ஏனெனில, சரீர சமபந்தமுடைய பிராணிகள் யாதொரு சமபநதமும இல்லாத அகண்ட வஸ்துவை நோக்கிப் பிரயாணம தொடஙகுவது மிகுநத கஷ்டமான காரியமாகத் தான் இருக்கும. தங்கள் கர்மாக்களை யெல்லாம் என்னிடமே ஒப்புவித்து, முழு நம்பிக்கையுடன் என்னையே

தியானம் செய்து வணங்கி வேறெந்த வஸ்துவினிடமும் பற்று வைககாமலிருப்பவர்களை நான் இடை விடாமல் அவர்களை வாட்டுகிற ஜனன மாணங்களென்ற சாகாத்தினின்றும் சீக்கிரம் கரையேற்றுவேன். அவர்களுடைய மனம் என்னையே முற்றிலும் பற்றி நிற்கிறதல்லவா ?" இநத வாசகங்களில் ஞானயோகமும் பக்தியோகமும் குறிப்பிடப்படுகின்றன. அநத இரண்டு யோகங்களும் மேற்சொல்லிய வாக்கியங்களால் விளக்கப்பட்டிருக்கின்றன என்றும சொல்லிவிடலாம். ஞானயோகம் மகத்தான பெருமையுடன் கூடியது. தத்துவசாஸ்திர மூலமாகப் பிரம்மானுபவம் அடையும் வழி அது. ஆனல், ஒரு விநோதம் பாருங்கள்; தான் செய்யவேண்டிய காரியங்களை யெலலாம் ததததுவ மறிவதால் செய்து முடிததுவிடலாமென்று ஒவவொரு மனிதனும் நினைத்துவிடுகிறான். ஆனல், தத்துவங்களை யறிநது ஒழுங்காக வாழ்க்கையை நடத்துவது உண்மையில் மிகவும் கடினம். அவவிதம வாழ்கையை நடத்த முயற்சி செய்யும்போது பெரிய ஆபத்துக்களில் நாம அகப்பட நேரிடும். உலகில் உள்ள ஜனங்கள் அாககர்சுபாவ முள்ளவரென்றும் தெய்வ சுபாவ முள்ளவரென்றும் இருவகையினராவர். தம் சரீா சுகங்களை மாத்திரமே நினைத்து, அதைப் பாராட்டுவது மாத்திரமே வாழ்கையின் சகலமுமென்று நினைப்பவர் அரக்கர் சுபாவமுள்ளவர். அப்படியின்றிச 'சரீாம் ஏதோ ஒரு லட்சியத்தை அடைதற்குச் சாதனமாத்திரமே' என்றும், 'ஆத்மப் பயிற்சிக்கு ஏற்பட்ட ஒரு கருவியே' என்றும் நினைப்பவர் தெய்வீக சுபாவம் பொருந்தியவராவார். "துஷ்ட சுபாவமுள்ள பிசாசும் தன் காரியத்தைப் பூர்த்தி செய்து முடிக்க சாஸ்திரங்களிலிருந்து மேற்கோளைக்கூறும்" என்று ஒரு பழமொழி யுண்டு. இதுபோல ஞானமார்க்கமாகிய தத்துவவழியானது நல்ல மனிதனுக்கு வழி காட்டி அவன் உன்னத லட்சியததை யடைவதற்கு உதவி செய்வதுபோலவே கெட்டவன் செய்யும் காரியங்களுக்கும் நியாயமெடுத்து உரைக்க முன்வருவதுபோ லிருக்கின்றது.

ஞானயோகததிலுள்ள பெரிய ஆபத்து இதுதான். பக்தி யோகமோ இவ்வித ஆபத்துடன் கூடியதலல; இலகுவான தும இனிமையும மிருதுததன்மையும் பொருநதியதா யிருககிறது. ஞானயோகியைப்போல் அவவளவு உன்னத வழிகளைப் பக்தன் பின் பற்றுவதில்லையாதலால் அவ்வளவு பெரிய படுகுழிகளும இவனுக்குக கிடையா. எந்த வழி யை ஒருவன பின்பறறினலும் ஆதமாவின் பநதங்கள் முழுமையும தெறித்து நீககினலன்றி ஒரு மனிதனுக்கு முகதியாகிய சுதநதிரம் கிட்டாது என்பது நிச்சயமாயிற் றே; ஆதலால், இநத மிருதுவான எளிய வழியைத தேர்ந் தெடுததுக்கொண்ட பகதன் எவ்வாறு முகதிநிலை பெறு வான்?

பகவானுடைய கருணையை அடைநத கோபிகளில் ஒருத்தியின் நிலைமையைச சறறுக கேளுங்கள்; அவள் செய்த புண்ணிய பாபங்கள் எலலாம் தீவிர பக்தியினல் தெறித்து நீங்குகின்றன. "கடவுளைத் தியானிப்பதில் ஏற் படும ஆழ்நத உற்சாகமாகியசுகம் அவளுடைய நற்காரியங் களால் ஏறபடும பநதங்களை எடுத்துககொண்டது. 'தியா னததால் அந்தக கடவுளை அடையவில்லையே' என்று பெரிய துககம ஏறபடுபோது அவளது ஜீவன் அடைகிற துன் பததால் அவளது பாவ விருததிகளெல்லாம நாசமாக்கப் படுகினறன. இவவாறு எல்லாப பநதஙகளும நீங்கபபெறறு அவள் முகதியை அடைநதாள்." (ஸ்ரீ விஷ்ணுபுராணத்தில் உளளவை) மானிட ஹிருதயததில உண்டாகும் பலவித உணாசசிகளும இயறகையில தவறுகளல்ல வென்பதும், அவற்றை ஜாககிரதையாகக் கையாண்டு உயர்நத வழியில் செலுததிககொண்டே போய் அதியுன்னதமான பரிசுத்த குண மடையுமாறு செய்யவேண்டியதே காரியமென்பதும பகதியோகததின முககிய ரகஸ்யமாகும். நாம் கடவுளிடம போய்ச் சேருமாறு அநத உணர்சசிகளைச் செலுத்தும் வழியே அதியுன்னதமான வழியாகும். மற்ற வழிகள் கள எல்லாம கீழானவைகளே. மேலும், நம உணர்சசிகளை

யெல்லாம் அவற்றாலேற்படும பயன்களைநோக்கிச சுகரூபங்க ளென்றும் துக்கரூபங்க ளென்றும் இரண்டு பிரிவாகத பிரிககலாமாதலால், 'துக்கரூபமான உணர்சசிகளை எப்படி நாம மேலெழுப்ப முடியும்?' என்று ஒருவன் மயங்ககக்கூடும். அது நிச்சயம் முடியும என்றும், துக்கமும நமக்குப் பயனை விளைக்கு மென்றும் பக்தியோகம நமககுப் போதிககிறது. ஒருவன் தனக்குத் தனமில்லை யெனறோ, வேறு உலக சம் பந்தமான விஷய மில்லையென்றோ துக்கப்படுகிறான என்று வைத்துககொள்வோம. அப்போது அவன் தவறான வழியில தன் உணர்ச்சியைச் செலுததுகிறான். ஆனால், 'வாழ்க்கையின் உன்னதலட்சியமாகிய கடவுள சாந்நித்தியம் ஏற்படவில்லையே' என்று ஒருவன் துககப்பட்டால் அத னால் ஏற்படும துன்பம் இவன முக்தி யடையுமாறு உதவி செய்துவிடும. அதுபோலவே, சொற்ப தனம கிடைத்து விட்டதென்று நீ சந்தோஷ மடைநதால அப்போது தவ றான வழியில் நீ அநத நல்லுணர்ச்சியைச செலுத்தியவ னாகிறாய் சநதோஷ உணர்ச்சியை இன்னும மேலான வழி யில் செலுத்தி உன்னதமான லட்சியத்தைப் போயடையு மாறு செய்யவேண்டும ஏனெனில், உன்னதமான லட்சி யததிலேதான் நம உன்னதமான ஆநநதமும இருககவேண் டும. நமமிடம் தோன்றுகிற எல்லா அறிவுகளும, உணர்சசிக ளும இவ்வாறே விவகரிக்கப்படும். அவற்றில் எதுவும் தவறான எண்ணங்க ளல்லவென்றே பகதன் சொல்கிறான். அவற்றையெல்லாம் பகதன் கைப்பற்றி எல்லாவற்றையும் கடவுளிடமே செல்லுமாறு வழி காட்டிவிடுகிறான்.



## நான்காவது அதிகாரம்

# பக்தனது பல நிலைகள்

கடவுளிடம் செலுததப்படும பக்தி எநத எநத விதங்களில் வெளிப்படுகின்றது என்று பார்ப்போம். மரியாதையுடன் கூடிய வணக்கம் முதலில தோன்றுகிறது. கோயிலகளிலும் புண்ணிய ஸ்தலங்களிலும் ஜனங்கள் ஏன் மரியாதையுடன் நடநதுகொள்கிறார்கள்? ஏனெனில், அவ்விடங்களில் கடவுள் வணங்கப்படுகிறார். அவ்வித இடங்களுடன் கடவுளின் நினைபபும கூடவே இணைக்கப்பட்டிருக கிறது. ஒவ்வொரு தேசததிலும ஜனங்கள் ஏன மதாசாரியர்களைக கண்டு மரியாதை செலுததுகிறார்கள்? அவ்வித ஆசாரியர்களெலலாரும கடவுளைப்பற்றியே போதிககிறார்களாதலால் மனிதர்கள் அவாகளுக்கு மரியாதை செலுத்துவது இயலபாகவே அமைகிறது. இவ்விதம் அன்பிலிருந்து மரியாதை உறபத்தியென்று தெரிகிறது. நமது அன்பு ஒருவரிடம செலலவில்லையானால் அவருககு நாம் மரியாதை செலுத்தவும் முடியாது.

பிறகு கடவுளிடம் பிரீதி என்பது ஏற்படுகிறது. இநதிரிய விஷயஙகளிடம மனிதர்களுக்கு எவவளவு அளவு கடநத ப்ரீதி ஏற்படுகிறது பாருஙகள். இநதிரியங்களைத திருப்தி செய்துவைப்பதற்காக எங்கே வேண்டுமானாலும் சென்று எவ்வளவு ஆபத்துககளையும் ஏற்றுக்கொளளத் தயாராக இருககிறார்கள். இவ்வளவு தீவிர அன்பைக கடவுளிடம திருபபிவிடுவதே பக்தன் செய்யவேண்டிய கடமையாகும.

பிறகு துன்பங்களுக்குள் மிக இனிய துன்பம் ஒன்று உண்டு; அதுதான் விரகம் என்று சொல்லப்படுவது; காதலனைப் பிரிநததனால் ஏற்படும் மிகுநத துயரம். 'கடவுளை இன்னும காணவில்லையே' என்ற காரணததால் ஆழ்ந்த துக்

கத்தை ஒருவன் அடைந்து, 'வாழ்க்கையில் அடையத்தக்க ஒரே விஷயமாகிய அக் கடவுளை எப்போது அடைவோம்?' என்று ஏக்கமடைந்து, அதனால் அதிருப்தியுள்ளவனாய் வெறியும் கொண்டு விளங்குகிறவன் விரகத்தை அடைந்தவனென்று சொல்லப்படுவான். அவ்வித மனோபாவனை உள்ளவன் தான் காதலித்த (ஒப்பற்ற) வஸ்துவைத் தவிர வேறெதைக் கண்டாலும் மனக்கலக்க மடைவான். வெளிப்பிரகிருதி சம்பந்தமான காதலில்கூட இவ்வித மனோநிலை சில சமயங்களில் ஏற்படுகின்றது. ஒரு மனிதன் ஒரு பெண்ணிடத்திலோ, அல்லது ஒரு பெண் ஒரு மனிதனிடத்திலோ அதிதீவிரமான காதல் செலுத்திவிட்டால் அப்போது அவர்கள் வேறெவரைக் கண்டாலும் ஒரு விதமான துன்பத்தையே அடைகிறார்கள். இதை நாம் அடிக்கடி பார்த்து வருகிறோம். பராபக்தியினால் மனம் நிறைந்திருந்திருக்கும்போது பக்தி செலுத்தப்படாத மனிதர்களையும் விஷயங்களையும் காணும்போதெல்லாம் இதேமாதிரி அவசரபுத்திதான் உண்டாகித் துன்பம் விளைக்கின்றது. கடவுளைத்தவிர வேறெதைப்பற்றியும் பேசினால்கூட அப்போது வெறுப்பு உண்டாகிறது. "அவன் ஒருவனையே நினைப்பாய்; அவனை மாத்திரமே நினைப்பாயாக! மற்ற வீண் வார்த்தைகளையெல்லாம் ஒழித்துவிடு." என்று முண்டக உபநிஷத் கூறுகிறது. கடவுளைப்பற்றி மாத்திரமே பேசுகிறவர்களிடம் பக்தன் நட்புக் கொள்கிறான். மற்றவைகளைப்பற்றிப் பேசுகிறவரிடம் பக்தனுக்கு வெறுப்பு உண்டாகிறது.

காதலித்த வஸ்துவிற்காக மாத்திரமே வாழ்க்கையை வைத்திருக்கும் நிலைமை இன்னும் உயர்ந்தது. அதைத்தான் ததார்த்த ப்ராண சம்ஸ்தான மென்று பக்தியோகத்தில் வர்ணிக்கப்பட்டிருக்கிறது. "கடவுளிடம் அன்பைச் செலுத்தினால் மாத்திரமே வாழ்க்கை அழகு பொருந்தியது, சிறப்புடன் விளங்குவது" என்று வர்ணிக்கப்பட்டிருக்கிறது. அந்த அன்பை நீக்கிவிட்டால் ஒரு நிமிஷமேனும் உயிர் இந்தத் தேகத்தில் தரித்திராது. அப்படிப்பட்ட உன்னத

மான அன்புநிலை அது. அன்பனை நினைக்கும காரணத்தால் அப்போது வாழ்க்கை இனிமை பொருந்தியதாகிறது. (வேறு இனிப்பு வாழ்க்கையில் கிடையாது.)

பக்தியினால் பூரணத்தன்மை யடையும்போது த்தீயத நிலை வருகிறது. கடவுள் கருணை வந்து எவன் அந்த கடவுளைப் போய் அடைந்துவிட்டானோ அவனே அந நிலைக்கு எழும்பமுடியும். அப்போது பக்தன் தன் கடவுளின் பாதங்களை ஸ்பரிசித்ததன பயனாகத தன் குண முழுமையும மாறி மகா பரிசுத்தவானாகி விடுகிறான். வாழ்க்கையின் காரியமெல்லாம அப்போது பூர்த்தியாகிவிட்டது. அதுமுதற்கொண்டு கடவுளைத தொழுவதற்காக மாத்திரமே பக்தன் ஜீவித்திருக்கிறான். கடவுளைத் தொழுவது ஒனறே அவனுக்கு இன்பம் தருவதாகும ; அதிலே அவன் ஆநநத மடைகிறான்; அதை அவன் விடவேமாட்டான். அப்படிப்பட்டவர்களைப் பற்றித்தான சாஸ்திரஙகள் பின வருமாறு கூறுகினறன:— "ஓ! அரசனே! ஹரியினது காருண்ய சொரூபத்தை எப்படி வாணிப்பது? எல்லாவறறையும அனுபவித்து முடித்துத் தம ஹிருதய பநதங்களை யெல்லாம் தெறிக்கச செய்தவர்களும் கடவுளிடம் பக்தியை மாத்திரம செலுத்திக்கொண்டிருக்கிறார்கள." மேலும, "தேவாகளும வணங்குகிற தேவாதிதேவன், முக்தியை இச்சிக்கினறவாகள் வணங்கும மூர்த்தி, பிரமமஞானிகளும் ஆராதிக்கும பெருமை வாய்நதவன்" முதலிய வாக்கியங்களைப் பாருஙகள ஒரு மனிதன இவ்விதம் த்தீய நிலைக்கு எழும்பிவிட்டால் அவனது பக்தியின் பலம இவ்வாறு விளஙகுகிறது. ஒருவன் தனனையே மறநது தனக்கு எதுவும சொநதமிலலையென்று நினைத்தானால், அப்போதுதான் அவன் த்தீய நிலையை அடைகிறான். சாமான்ய காதல் செலுத்தும ஒருவன் தன் காதலிக்குச சொநதமான எதையும சிறநத மதிப்புள்ள பொருளாகவே பாராட்டுவான ; அதுபோலவே, பக்தனுக்கும எல்லாப் பொருளும், அவன் அன்பிற்கு (பக்திக்குப்) பாத்திரமான கடவுளுக்கே அவை சொநதமாகை

யால், பரிசுத்தமான தன்மையுடன் கூடியவைகளேயாம். ஆமாம்! இது உண்மைதான. கடவுளிடம் பக்தி செலுத்து கிறவர்களுககு ஜகததிலுள்ள எல்லா விஷயஙகளும் அருமை யானவைகளே; எலலாம கடவுளுககே சொநதமல்லவா?

## ஐந்தாவது அதிகாரம்

# ஜகத்தினிடம் செலுத்தப்படும் அன்பும், தன்னல மறுப்பும்

சமஷ்டியாகிய ஜகத்தினிடம் அன்பு செலுத்தாமல் தனிப்பட்டதாகிய வியஷ்டியினிடம் எவ்வாறு அன்பு செலுத்த முடியும்? எல்லாவற்றிற்கும் பொதுவாய்க் காரணரூபமானதாய் ஜகத் முழுவதும் சேர்ந்ததாக விளங்குவதே சமஷ்டி சொரூபமாகிய கடவுள். நம்மால் பார்க்கப்படும் ஜகத் ஸ்தூலரூபமாகிய வியஷ்டியே. இந்த வியஷ்டித் தன்மையுடன் கூடிய ஜகத்தினிடம் ஒரே மாதிரி அன்பு செலுத்தவேண்டுமானால் பொதுவான தன்மையுடன்கூடிய சமஷ்டியினிடம் அன்பு செலுத்தித்தான் ஆக வேண்டும். அந்த ஏக வஸ்துவினிடம் கோடிக்கணக்காகப் பல சிறு வஸ்துக்கள் காணப்படுகின்றன. இந்தப் பலவித குணங்களுடன் கூடிய வஸ்துக்களில் இந்திய தத்துவ சாஸ்திரிகள் நிற்பதில்லை. இவ்வித வஸ்துக்களில் வேகமாகவே தமது பார்வையைச் செலுத்திப் பிறகு திடீரென்று மேலே மூம்பி இவற்றையெல்லாம் தன்னுள் அடக்கிக்கொண்டிருக்கும் பொதுவான சொரூபத்தினிடம் மனதைச் செலுத்தி அவ்வித வஸ்துவைக் கண்டுவிடுகிறார்கள். இவ்வாறு பொதுவான தர்மத்தைக் காண்பதே இந்திய தத்துவ சாஸ்திரங்களுக்கும் மதங்களுக்கும் வேலையாக இருக்கிறது. ஒரே அகண்ட சொரூபமாகிய பொது வஸ்துவினிடம் எல்லாவற்றினுடைய ஏகத்வத்தைக் காண்பதற்காக ஞானி பாடுபடுகிறான். அதை அறிந்ததும் எல்லா மறிந்தவனாகிறான். இந்தப்பொதுவான ஒரேவித குணத்தையுடைய பரமபுருஷனைக் காண்பதற்கே பக்தனும் விரும்புகிறான்.

## ௫-வது அதி.— ஜகத்தினிடம் செலுத்த வேண்டிய அன்பும், தன்னல மறுப்பும்

ஆத்மானுபவத்தால் அந்தப் புருஷனையே அடைய பக்தன் விரும்புகிறான். அந்தப் புருஷனிடம் அன்பு செலுத்தி விட்டால் ஜகத் முழுமையிலும் அன்பு செலுத்தியதாக ஆகிறது. சர்வ சக்திகளையும் அடக்கிக்கொண்டிருக்கும் அந்தப் பொதுவான சக்தியை அடக்கி யாளவேண்டு மென்று யோகி விரும்புகிறான். அந்தப் பொதுவான சக்தி வசமானால் ஜகத் முழுமையும் வசமாகிறது. எவ்வழியில் பார்த்தாலும் இந்தியாது மனம் ஒவ்வொன்றிலு மிருக்கும் சமஷ்டித் தன்மையைத் தேடியே செல்கிறது. பூத பௌதிக கலைகளிலும், மனோதத்துவத்திலும், பக்தியிலும், தத்துவத்திலும் இவ்விதம் பொதுத்தன்மையை நாடியே மனம் செல்கின்றது.

பக்தனுடைய நிலைமையைக் கவனிப்போம். நாம் ஒவ்வொருவரிடமும் அன்பு செலுத்திக்கொண்டு போவோம் என்று மெதுவாகச் சென்றுகொண்டிருந்தால் எவ்வளவு காலம் கடந்தாலும் ஜகத் முழுவதிலும் அன்பு செலுத்தத் தக்க நிலை யேற்படாது. இதையே பக்தன் அறிகிறான். ஆதலால், ‘எல்லாவித அன்பும் ஒன்றுகூடுவதே கடவுள்’ என்று அவன் அறிகிறான். இந்த முக்கிய கொள்கையை அறியவே ஒரு மனிதன் முயற்சி செய்யவேண்டும். ஜகத்தி லுள்ள ஜீவர்கள் — முக்தர்களும் பந்தநிலையிலுள்ளவர்க ளும் முக்திக்காகப் போராடுகிறவர்களும் ஆகிய எல்லா ஜனங்களும்— கொண்டுள்ள லட்சியங்களை யெல்லாம் ஒன்று சேர்த்துப் பார்த்தால் அவற்றின் சமஷ்டியே கடவுள். இந்தப் பாவனையை யடைந்த பிறகுதான் ஒருவன் ஜகத்முழுவதி லும் பரவக்கூடிய அன்பை அனுபவிக்க முடியும். ஆகவே, கடவுள் சமஷ்டி சொரூபியென்றும், அக் கடவுளின் குணங் களே பார்க்கப்படும் ஜகத்தாக ஆவிர்ப்பவித்திருக்கின்றன என்றும் பக்தன் அறிகிறான். இவ்வித சமஷ்டியினிடம் அன்புசெலுத்த முடியுமானால் அப்போது நாம் ஒவ்வொன்றி னிடமும் அன்பு செலுத்த முடியும். அப்போது உலகத்

தில் அன்பு செலுத்தி நற்காரியங்களைச் செய்து முடிப்பது இலகுவான காரியமாக இருக்கும். அதற்கு முதலில் கடவுளிடம் பக்தி செலுத்தி அதிகாரம் பெற்றாகவேண்டும். அந்த அதிகாரம் பெறாமல் உலகினிடம் அன்பு செலுத்தவும் முடியாது; எவ்வித நன்மையும் செய்ய முடியாது. "எவ்வித வஸ்துவும் அவனுடையதே; அவனே என் அன்பன்; அவனிடமே என் அன்பும் செல்கிறது." என்று பக்தன் சொல்கிறான். காலக்கிரமத்தில் எல்லாம் அவனுக்குப் புண்ணிய வஸ்துக்களாக ஆகின்றன. ஏனெனில், 'எல்லா வஸ்துக்களும் மனிதர்களும் கடவுளின் ஆவிர்ப்பவங்களே' என்று அறிய அவன் முயற்சி செய்துகொண்டிருக்கிறான். அப்படியிருக்க அவன் எவ்வாறு பிறருக்குத் துன்பம் செய்வான்? பிறரிடம் அவன் ஏன் வெறுப்புக் கொள்வான்? கடவுளிடம் செலுத்திய அன்பின் முதிர்ச்சியாகிய பக்தியால் அவனுக்கு ஜகத்திலுள்ள ஒவ்வொரு வஸ்துவினிடத்தும் அன்பு ஏற்பட்டுவிடுகிறது. கடவுளின் சமீபம் நெருங்கும்போது 'எல்லாவஸ்துக்களும் அவரிடமே தோன்றி விளங்குகின்றன' என்று பக்தன் அறிகிறான். இவ்வித பராபக்தி என்ற ஆநந்தத்தைத் தனக்குச் சொந்தமாக்கியபின் பக்தன், 'கடவுள் எங்கும் எல்லா வஸ்துக்களிலும் இருக்கிறார்' என்பதை யறிகிறான். அப்போது அவன் ஹிருதயத்திலிருந்து வறாமல் அன்பு ஊறிக்கொண்டேயிருக்கும். ஆதலால், நாம் அன்பின் உன்னத நிலைக்குச் செல்லச் செல்ல உலக வஸ்துக்களிடம் தோன்றுகிற பேதங்களெல்லாம் அடியுடன் மறைந்துகொண்டே வரும். மனிதனை மனிதனாகக் காண்பது அப்போது இல்லை. 'எல்லோரும் கடவுள் சொரூபமே' என்று சொல்லப்படுவார்கள். மிருகங்களும் மிருகங்களாகத் தென்படமாட்டா; புலிகூடப் புலியாகத் தென்படாது. எல்லாம் கடவுளின் ஆவிர்ப்பவங்களாகவே தோன்றும். ஆதலால், இவ்வித தீவிர பக்தியுள்ளவனிடம் உள்ளேயிருந்து வழிபாடு தானே பொங்கி ஒவ்வொரு பிராணியினிடமும் செல்லுகின்றது. "ஹரி எல்லாவற்றுள்ளும் இருக்கிறார்' என்று அறிந்து ஞானிகள்

## ௫-வது அதி.—ஜகத்தினிடம் செலுத்த கூட ப்படும் அன்பும், தன்னல மறுப்பும்

எல்லாப் பிராணிகளிடமும் சலிக்காத அன்பு செலுத்து கிறார்கள்." என்று சாஸ்திரங்கள கூறுகினறன.

இவ்வாறு எல்லாவற்றையும ஆணைததுக்கொள்ளும் தீவிர அன்பின் பயன் என்ன? 'உலகில நடைபெறும் எது வும் நமககு விரோதப்பான்மை கொண்டதல்ல' என்னும் திட நமபிககையாகிய அப்ராதிகூல்யம் ஏற்படுகிறது. இது தான் பரிபூர்ண தன்னல தியாகம் எனப்படுவது. அப் போதுமாததிரமே துன்பம வரும்போது அன்பு நிறைநத ஜீவன் துன்பததை எதிர்கொண் டழைக்க முடியும; துக் கம் வரும்போது "நீயும் என் அன்பனால் அனுப்பப்பட்ட விஷயமேயாதலால், ஏ, துககமே! வா!" என்றழைக்க முடியும. ஒரு சர்ப்பம் வநதாலும அதையும எதிர்கொண்டு பக்தன் அழைப்பான். இவ்வாறே மரணததையும வரவேற் பான். எல்லாவற்றையும புனசிரிபபுடன் வரவேறறு, "எல் லாம் என்னிடம் வருகின்றன. நானே புண்ணியசாலி" எனறு சொல்வான். கடவுளிடத்திலும் கடவுளுககுச் சொநதமான வஸ்துக்களிடததிலும அதிதீவிரமான அன் பைச் செலுததிவரும் பகதனுககு தனனைப்பற்றிய வரை யில் நேரககூடிய சுகத்திறகும துனபததிற்கும பேதம தெரி யாது. துன்பம வந்துவிடடது என்றும், துககம வநது விட்டது என்றும குறை கூறுவதென்றால் என்னவெனறே அவன் அறியமாட்டான். இவவாறு கடவுளின் இசசைப் படியே விட்டுவிட்டு யாதொரு குறையும் கூறாமல் இருககக் கூடிய தன்னல மறுப்பின் பூரணததன்மையை அடைவது எவ்வளவோ மேலானதல்லவா? உலகில் தீர புருஷர்கள் என்று பெயர் பெற்று விளங்கும் எல்லோருடைய புகழை யும் சேர்தது அடைவதைக் காட்டிலும இவ்வித தன்னல மறுப்பு எவ்வளவோ மேமபட்ட நிலையாகும.

ஏராளமான ஜனங்களுக்குச் சரீரமே சகலமும். ஜகத் முழுமையும் சரீரமே என்று அவர்கள் நினைத்துவிடுகிறார் கள். ஆதலால், சரீர சுகாநுபவங்களை அடைவதே அவர்

களுக்கு வாழ்க்கை முழுவதுமாகும். சரீரத்தையும் இந்திரியங்களுக்குச் சுகங்களைத் தரக்கூடிய விஷயங்களையும் வணங்குமாறு பலவந்தம் செய்கிற பூதம் நம்மிடமெல்லாம் குடிகொண்டுவிட்டது. வீண் தர்க்கங்களையெல்லாம் செய்துகொண்டு பகுத்தறிவு என்ற பிரதேசங்களில் அதியுன்னதமான உயரத்திற்கு நாம் ஏறினலும் கழுகுகளைப் போலவே நாம் ஜீவித்துக் கீழேயுள்ள பிணங்களிடமே நமது மனதைச் செலுத்திவிடுகிறோம். நமது சரீரத்தை நாம் ஏன் ஒரு புலிக்குக் கொடுத்து அதன் பசியை ஆற்றலாகாது? இந்தச் சரீரத்தை எதற்காக நாம் காப்பாற்ற வேண்டும். இதனால் ஒரு புலி திருப்தியடையுமே! தன்னல தியாகமாகிய ஆராதனைக்கு இது வெகு தூரத்தேயுள்ள நிலையோ? தான் என்ற அகம் சிறிதுமின்றி முற்றிலும் நீங்கக்கூடிய லட்சியத்தை நாம் ஏன் அனுபவிக்கலாகாது? அன்பென்ற மதத்தில் இது ஒரு உன்னதமான உயரம். இவ்வளவு உயரத்தில் எழும்பும்போது மயக்கம் வரக்கூடும். ஆதலால்தான் உலகில் மிகச் சிலரே அவ்வளவு உயரம் எழும்பியுள்ளார்கள். ஆனல், அவ்வளவு உயரக் கிளம்பினலன்றி, எப்போதும் மனமார்ந்த தன்னல தியாகம் செய்யத் தயாராகவே இருந்தாலன்றி எந்த மனிதனும் பூரண பக்தனுக முடியாது. நமது சரீரங்களை நம்மால் முடிந்த வரையில் காப்பாற்றப் பிரயத்தனம் செய்தாலும் அவைகள் நீங்கிப்போகும் காலம் வந்தே தீரும். சரீரங்கள் நித்தியமான வஸ்துக்கள் சேர்ந்தவைகளல்ல. அப்படியிருக்க நாசமடையக்கூடிய இச் சரீரங்கள் பிறர்பொருட்டுச் செய்யும் ஊழியங்களில் அழிவது மேன்மையாகாதோ? இவ்வித ஊழியங்களில் சரீரங்களைச் செலவிடுகிறவர்களே புண்ணிய புருஷர்கள். "தனத்தை மாத்திரமல்ல, உயிரையே பிறர் பொருட்டு விட்டுவிட ஞானி தயாராயிருக்கிறன். உலகில் மரணமென்பது நிச்சயமாக இருப்பதால நல்ல காரியத்தில் மரணமடைவது நல்லது." ஐம்பது வருஷ காலமோ அல்லது நூறு வருஷங்களோ நாம் ஜீவித்திருக்கலாமென்று வைத்துக்கொள்ளுங்கள்; முடிவில் கிடைப்பதென்ன?

மாணமேயாம். பல வஸ்துக்களின் சேர்க்கையால் ஆக்கப் பட்ட ஒரு வஸ்து எப்போதேனும் பிரிநது நாசத்தை யடையவேண்டியது தான். ஆதலால், சரீரமும் பிரிந்து போகும காலம் வநதுவிடும. ஏசுகிறிஸ்து, முகம்மது நபி, புததபகவான் முதலிய பல தீர்ககதரிசிகளும், ஆசாரியர்க ளுமஆகிய இவர்களுடைய சரீரங்களும் இதே கதியைததா னடைநதுவிட்டன. ஆதலால், தோன்றி மறையும் இவ் வுலகததில், ஒவ்வொன்றும் வீழ்ந்து அழிநதுவரும் இவ் வுல கத்தில், நமக்குக கிடைககும காலத்தைச் சிறந்த காரியங் களிலேயே செலவிடவேண்டும' என்றும, 'வாழ்க்கை யைச் சகல பிராணிகளுககாகவும் செலவு செய்வதைவிடச் சிறநதகாரிய மெதுவுமில்லை' என்றும பக்தன அறிகிறுன். இநதக் கொடிய சரீர ஆத்ம புத்தியே உலகில் தன்னலத்தை விர்ததிசெய்து வளர்க்கின்றது. 'நாம சரீரத்தைத் தவிர வேறல்ல' எனறும, 'அதைக காப்பாற்றிச்சந்தோஷமடையச் செய்யவேண்டும்' என்றும் நினைதது மயங்கிவிடுகிறோம். 'நாம சரீரமல்ல, ஆதமாதான்' என்ற நிச்சய புத்தி நமக்கு ஏற்பட்டால் எவருடனும நாம் சண்டைக்குப்போகக கார ணம ஏற்படாது. தனனலமிக்க எண்ணங்கள் அப்போது நமமிடம தோனறமாட்டா. "உலக விஷயங்களைப் பற்றிய வரையில் நாம இறநதுவிட்டதாகவே நினைக்கவேண்டும்" என்று பகதன் சொல்கிறுன். அதுதான் தன்னல தியா கம். எல்லாம் கடவுள் செயல்—"உன் இச்சை நிறை வேறட்டும"—என்று பிரார்த்திப்பதன் கருத்தும் அதுவே. நமது பலவீனங்களும் ஆசைகளும் காரணமாக நாம் செய் யும் காரியங்களுக்கும் "கடவுள் இச்சை" என்று கூறிச் சண்டையிடுவது அல்ல. தன்னலமிக்க போராட்டங்களின் மூலமாகவும் நன்மை யுண்டாவதுண்டு. இதற்குக் காரணம் நமது சகதியல்ல; கடவுளின் கருணையே இதற்குக கார ணம. ஆதலால், ஒருபோதும் தன்னிமித்தம் இச்சிதது ஒரு காரியமும செய்யாமலிருப்பது பூர்ண பக்தியுடையவனது நிலைமையாகும. "கடவுளே! உனக்காக, உன் பெயரைச்

சொல்லி உயர்ந்த கோவில்களைக் கட்டுகிறார்கள்; ஏராள மான தர்மங்களைச் செய்கிறார்கள். நானோ ஏழை; என னிடம ஒன்றுமில்லை. ஆதலால, இதோ என சரீரததையே என்னைவிட்டு (வேறுபடுததி) அதை உனது பாதகமலஙக ளில் சோததுவிடுகிறேன். எனனைக் கைவிடாமலிருப்பா யாக." இவவித பிரார்ததனை பகதனுடைய ஹிருதயத்தி னின்று வெளியேறுகின்றது. தன ஆதமாவையே இவ வாறு தன் அன்பனுககாக அர்ப்பணம செய்வதாகிய நித் திய எகனுததைவிட உயர்நத காரிய மெதுவுமிலலை தன மும் அதிகாரமும கலவியும சோநது இவ்வளவு சிறநத தன் மறுப்பைக கொடுககமாட்டா. பக்தனது அமைதியான இநதத துறவின் மூலமாக அடையப்படும சாநதம 'அறி விற் கப்பாறபட்ட சாநத' நிலையாகும. இதறகிணை எதுவு மில்லை. இதன மூலமாக அடையபபடுவது, உலக விஷ யங்களில் யாதொரு கருததும் செல்லாத நிலையாகிய அப் ராதிருப்யம் எனபது. இவவித ஆழ்நத துறவு நிலையில் எலலாப பறறுகளும நீங்கிவிடுகின்றன. மீதியிருப்பது 'எவரிடம் எலலா வஸ்துககளும வசித்துச் சலிக்கின்றன வோ' அவ்வித கடவுளிடம மனபபூர்ததியான அன்பு தான். கடவுளிடம ஏற்படும இந்தப் பற்று ஆத்மாவைப் பந்தப்படுததாமல் எல்லாப பநதங்களையும தெறிக்கச் செய் கின்றது.

## ஆறுவது அதிகாரம்

# அன்பும் ஞானமும் ஒன்றே

**உன்னதமான** பரஞானம், கீழ்ப்பட்டதான அபர ஞானம் என்ற இருவகை ஞானங்களை உபநிஷத்துக்கள் போதிக்கின்றன. உபநிஷத்தில் கூறப்பட்ட பரஞானத்திற்கும், பக்தனது பராபக்திக்கும் உண்மையில் எவ்வித பேதமும் கிடையாது. முண்டகோபநிஷத் பின்வருமாறு கூறுகிறது :—“மேலானது (பரம), தாழ்ந்தது (அபரம்) என்று இருவகை அறிவுகள் அறியத்தகுந்தவை என்று பிரம்ம ஞானிகள் தெரிவிக்கிறார்கள். தாழ்ந்த அறிவானது ரிக்வேதம - யஜுர்வேதம - சாமவேதம - அதர்வவேதம் முதலிய வேதங்களையும, ஸ்வரத்தோடு உச்சரிக்கவேண்டிய முறைகளைப் போதிக்கும சிக்ஷையையும், எக்ஞ சம்பந்தமான விதிகளைப் போதிக்கும கல்பத்தையும, பதங்களின் பொருள்கள் தாதுக்கள முதலியவற்றைப் போதிக்கும் நிருக்தத்தையும, இலக்கணம- சந்தஸ் - ஜோதிஷம் முதலியவைகளையும அறிவது. மாறுதலையுடன் கூடிய அகண்ட பிரமமத்தை யறிவது எதுவோ அதுவே மேலான பரஞானம.” இவ்வாறு பிரமமஞானமே மேலான அறிவு என்று தெளிவாக விளக்கப்பட்டிருக்கிறது. இனி தேவி பாகவதத்தில் பராபக்தியைப்பற்றிக் கூறியிருப்பதைக் கவனிப்போம்:—“ஒரு பாத்திரத்தினின்று மற்றொரு பாத்திரத்திற்குள் எண்ணெயை ஊற்றும்போது இடைவெளி தோன்றாமல் ஒரே தாரையாக விழுவதுபோல் கடவுளிடம் மனது இடைவிடாத சிந்தனையைச் செலுத்தினால் அப்போது பராபக்தி இருக்கிறதென்று சொல்லப்படும.” யாதொரு கலக்கமுமின்றித் திடமாக ஒருவனது மனமும் ஹிருதயமும் கடவுளிடம செலுத்தப்படுவதாகிய நிலை

மிகுந்த பற்றினால் ஏற்படுகிறது ; இதுவே கடவுளிடம் மனிதன செலுத்துகிற அன்பின் உன்னதமான ஆவிர்ப்பவ மாகும். பக்தியின் இதர நிலைகளெல்லாம் உன்னத நிலையில் உள்ள பராபக்திக்கு அழைத்துச் செல்லும சாதனங்களே யாம் இநதப் பராபக்திககு ராகாநுகா என்ற பெயரும் வழங்கப்படுகிறது ; அதாவது, பற்றின் பிறகு ஏற்படும் அன்பு. இவ்வித பராபக்தி மனித ஹிருதயததிற்குள் வந்து சேர்நதவுடன அப்படிப்பட்ட மனிதன் இடைவிடாமல் கடவுளையே சிந்திப்பான் ; வேறெவ்வித சிந்தையும் அவனு க்கு ஏற்படுவதில்லை. கடவுளைத்தவிர வேறெவ்வித சிந்தனைக் கும் அவன் தன் மனத்தில் இடம் கொடுப்பதில்லை. அவ னது ஆத்மாவும் பரிபூர்ண பரிசுத்தத்தன்மை யடைந்து, ஜடசம்பநதமான பந்தங்களையும் மனது சம்பநதமான பந தங்களையும தெறித்துககொண்டு, சாநத நிலையையும் முக்தி யையும் அடைகிறது. அவ்வித மனிதன் மாத்திரமே தன் ஹிருதயத்தில் கடவுளை வணங்க முடியும். அவனுக்கு ரூபங்களும், சொரூப லட்சணங்களும், புத்தகங்களும, மதக் கொள்கைகளும் ஆகிய எதுவும அவசியமில்லையாகின்றன; அவனுககு எவவிதத்திலும் உபயோகமில்லாமற் போகின் றன. ஆனால், இவவித அன்பை (பக்தியை)க கடவுளிடம் செலுத்துவது ஏதோ இலகுவான காரியமென்று நினைதது விட முடியாது.

அன்பு எங்குத் திரும்பவும அடையப்படுகிறதோ அவ் விடத்திலேயே சாதாரணமாக மானிட அன்பு செல்லுகின் றது. அனபு செலுத்திய இடத்திலிருநது பிரதியாக அன்பு திரும்பவில்லையானால் பிறகு கொடிய அலட்சியமே ஏற்படு கிறது. ஆனாலும ஏதோ அருமையாகச் சில இடங்களில் அன்பு திருமபாமலிருக்கும்போதுகூட அன்பு செலுத்தப் படுவதையும் நாம் காண்கிறோம. இதற்கு உபமானம் சொல்லவேண்டியதற்காக விட்டில்கள் விளக்கினிடம் வைக் கும அன்பை எடுத்துக்கொள்வோம். இதுவும பிரதிபலிக் காத இடத்தில் செலுத்தப்படும அன்பும் ஒத்திருக்கின்

றது என்று சொல்லலாம். பூச்சிகள் விளக்கினிடம அன்பு செலுத்துவதே சுபாவமாகையால் அவ்விதம செலுதநிவிளக்கில் விழுநது மரண மடைகின்றது. அன்பைச் செலுத்துவதே சுபாவமென்பதைத்தவிர வேறு காரண மில்லையென்ற நிலேயே உலகில் காணக்கூடிய அன்பின் அதியுன்னதமான நிலே என்பதிற சநதேகமே யில்லே. இதே மாதிரி (பிரதிபல ஃனப்பற்றிய சிநதை யிலலாமல்) ஆத்மதர்ம விஷயததில் அன்பு செனறுவருமானல் அதுவே ஒருவஃனப் பராபக்தியினிடம் சேர்பபிககும.

ஏழாவது அதிகாரம்

# பக்தியின் மூன்று அம்சங்களும் கடவுளும்

அன்பினின்று பிரிக்க முடியாத மூன்று குணங்களையும் முக்கோணங்களாகப்பாவித்து 'அன்பு முக்கோணவடிவு கொண்டது' என்று நினைப்போம். மூன்று கோணங்களின்றி ஒரு முக்கோண உருவம் ஏற்படாது; அதுபோல, பின் வரும் மூன்று குணங்களுமில்லாமல் உண்மையான அன்பு ஏற்படமாட்டாது. அன்பு வர்த்தக முறையை அறியாது. இதுவே அன்பென்ற முக்கோணத்தின் முதற்கோணம் அல்லது அம்சம். அன்பு செலுத்தியதற்குப் பிரதியாக எதையேனும் தேடும் குண முண்டானால், அப்போது உண்மையான அன்பு இருக்க முடியாது. அது வெறும் வர்த்தக மாத்திரமேயாகும். ஆதலால், கடவுளிடம் நாம் செலுத்தும் மரியாதைக்கும் அன்பிற்கும் பதிலாக அவரிடம் ஏதேனும ஒரு கருணையை எதிர் பார்க்கும் வரையில் நமது ஹிருதயத்தில் உண்மையான கடவுள் பக்தி யிருக்க முடியாது. தங்களிடம் கடவுள் ஏதேனும் தயவு வைக்கவேண்டுமென்று எதிர்பார்த்துக் கடவுள் பக்தி செய்கிறவர்கள் அவ்வித தயவு அல்லது கிருபை கிடைக்காவிட்டால் பக்தியைச் செலுத்தமாட்டார்கள் என்பது நிச்சயம். கடவுளிடம் அன்பு பாராட்டத்தக்க குணங்கள் அமைந்திருக்கின்றன என்று கண்டு பக்தன் அன்பு செலுத்துகிறான். மெய்யன்பு செலுத்தும் பக்தர்களிடம் இவ்வித தெய்வீக உணர்ச்சிகளை எழுப்பி வளர்ப்பதற்கு வேறெவ்வித எண்ணமும் தேவையில்லை.

## எ-வது அதி.—பக்தியின் மூன்று அம்சங்களும் கடவுளும்

ஒரு காலத்தில் ஒரு பெரிய அரசன் காட்டிற்குச் சென்று அங்கு ஒரு முனிவரைச் சந்தித்த கதையைப்பற்றிக் கேட்டிருக்கிறோம். சிறிது நேரம் அரசன் அம் முனிவரிடம் பேசிக்கொண்டிருந்த பிறகு அவரது பரிசுத்த குணமும ஞானமும இவ்வளவு அதிகமாக இருக்கிறதென்றறிந்து சந்தோஷ மடைநதான். ஆதலால், அம் முனிவர் ஏதேனும வெகுமதிகளைத் தன்னிடம அடைநது தன்னைக் கௌரவப்படுத்தவேண்டு மென்று அரசனுக்கு விருப்பமுண்டாயிற்று. முனிவரோ அதற்கு உடன்படவில்லை. "இக் காட்டிலுள்ள கனிகள் எனக்குப் போதுமான உணவாகின்றன. குன்றுகளிலிருநது ஓடி வருகிற தெளிவான தண்ணீரே எனக்கு நோக்கியான பான மாகிறது. மரங்களின் பட்டைகள் என் சரீரத்தைப் போர்த்து ரட்சிக்கின்றன. மலைகளிலுள்ள குகைகள் எனக்குப் போதுமான வீடு ஆகின்றன. ஆதலால், உன்னிடமிருநதும பிறரிடமிருந்தும நான் ஏன் வெகுமதியடையவேண்டும்?" என்று தெரிவித்தார். அரசன அவரை விடாமல் "எனக்குப் பயன் விளைத்து என்னை ரட்சிப்பதற்காக, ஐயனே! தயவு செய்து என் அரண்மனைக்கு வந்து என் கைகளிலிருந்து ஏதேனும் பெற்றுககொள்ளவேண்டும்" என்று கேட்டுக்கொண்டான். இவ்வாறு பலமாகத் தூண்டிய பிறகு அரசன் விருப்பப்படி செய்ய முனிவர் ஒப்புக்கொண்டு அவனுடன் அரண்மனைக்குச் சென்றார். அங்கு முனிவருக்கு வெகுமதி யளிப்பதறகு முன அரசன் தான் தெய்வத்தைப் பிரார்த்திக்கும வழககப்படி ஆரம்பித்து, "கடவுளே! எனக்கு இன்னும் குழந்தைகளும அதிக தனமும் ராஜ்யங்களும் கொடும். என் தேகம இன்னும் அதிக ஆரோக்கியமுள்ளதாக ஆகட்டும." முதலிய பலவித வேண்டுகோள்களைச் சொல்லிப் பிரார்த்தித்தான். அரசன் இவ்வித பிரார்த்தனைகளை முடிப்பதற்குமுன் முனிவா எழுந்து அந்த அறைக்கு வெளியே வந்துவிட்டார். இதைக கண்ட அரசன் அதிசயித்து, ஒன்றும விளங்காதவனாய், அம முனிவரைத்

தொடர்ந்து சென்றான். பின்னால் தொடர்ந்து செல்லும் போதே அரசன், "ஐயா! நீர் என்னிடம் வெகுமதி பெற்றுககொள்ளாமலே போகின்றீர்களே!" என்று கூவிக் கொண்டு சென்றான். உடனே முனிவர் திரும்பி, "அரசே! யாசிப்பவர்களிடம நான் யாசிககும வழக்கம் இல்லை. நீயே ஒரு யாசகனாயிருக்கிறாய். அப்படியிருக்க நீ எவ்வாறு எனக்கு எதையாவது கொடுகக முடியும? பிச்சைக்கார னிடம வநது வெகுமதிகளைப் பெற்றுக்கொள்ள நான் ஒரு மூடனல்ல. ஆதலால், என்னைத தொடர்நது வரவேண் டாம நீ போகலாம." என்றார். இக் கதையில் மதசம் பநதமான விஷயங்களில் யாசகர்களுககும மெய்யன்புடன் பகதி செலுத்துகிறவர்களுக்கும் விததியாசம் விளங்குகிறது. எவ்விதமான வெகுமதியை உத்தேசித்தும்—முக்திககாக என்றுகூட—கடவுளை வணங்குவது பகதி என்ற உயர்நத கொள்கையைக குறைவு படுத்தியதுபோ லாகினறது. ஏனெனில், யாதொரு பிரதிபலனையும் இசசிக்காமல் எப் போதும இயறகையாகவே விளஙகிககொண்டிருபபதுதான் அன்பு அல்லது பகதி யெனப்படுவது. பகதனால் அன்பு செலுத்தாமலிருகக முடியாது; அதனால் அன்பனாகிறான். ஒரு அழகிய காட்சியை நீங்கள் பார்க்கும்போது அத னிடம அன்பு செலுததிவிடுகிறீர்கள். (பார்கக அழகென்று காடசியை அனுபவிககிறீர்கள்.) அபபோது ஏதேனும் பிரதியாக அதனிடமிருநது நீங்கள் எதிர்பார்ப்பதில்லை. அநதக காட்சியும உங்களிடம் எதையும விரும்புகிறதில்லை. ஆனால், அக காட்சியானது உங்கள் ஆத்மாவிடம் இருக்கக் கூடிய சாடு முரடுகளைப் போககி மனதினிடம் ஒரு ஆநந் ததததை உண்டாககிவிடுகிறது. உங்களுக்கு அமைதியைக் கொடுத்து, உங்களை மேலெழுப்பி ஏதோ இநத அநித்திய வாழ்ககையிலிருநது மேலே உள்ள ஒருவித நிலைககு உங் களைக் கொண்டுபோயிருககிறதுபோல் காட்டிவிடுகின்றது; ஏனெனில், உஙகள் மனம திவ்ய சொரூபாநநதத்தை யடை ந்து ஒப்பறற அமைதி அல்லது சாநத நிலையை அடைநது விட்டது. உண்மையான அனபின் தன்மை இப்படிப்பட்ட

தாகும். இந்தக் குணமே நாம் சொல்லிய முக்கோணத்தின் முதற்கோணம். ஆதலால், நீங்கள் அன்பு செலுத்துவதற்குப் பிரதியாக எதையும் கேட்டுவிடாதீர்கள். எப்போதும் நீங்கள் கொடுக்கின்றவராகவே இருந்துவிடுங்கள். உங்கள் அன்பாகிய பக்தியைக் கடவுளிடம் செலுத்தி அதற்குப் பிரதியாக அவரிடமிருந்து எதையும் கேட்காதீர்கள்.

அன்பென்பது பயத்தையே அறியாது. இதுவே அன்பென்ற முக்கோணத்தின் இரண்டாவது கோணம். பயத்தால் கடவுளிடம் அன்பு (பக்தி) செலுத்துகிறவர்கள் மனிதர்களுக்குள் கடைப்பட்டவர்களே; இன்னும் இவர்கள் மனிதராகவும் ஆகவில்லை. கடவுள் தண்டிப்பாரென்ற பயத்தால் மாத்திரம் அவர்கள் கடவுளைத் தொழுகிறார்கள். ஒரு கையில் சவுக்கும் மற்றொரு கையில் செங்கோலும் ஏந்திய ஒரு பெரிய புருஷராகவே கடவுள் அவர்களுக்குத் தோன்றுகிறார். கடவுள் கட்டளைக்குக் கீழ்ப்படியாவிட்டால் சவுக்கடி விழுமென்ற பயம் அவர்களை வாட்டுகிறது. அவ்வாறு தண்டனைக்குப் பயந்து கடவுளைத் தொழுவது இழிவான காரியம். இவ்விதம் செய்வதைப் பார்த்துக் கடவுள் வழிபாடு என்ற பெயரையும் அதற்குக் கொடுக்க வேண்டுமானால் மிகத் தாழ்ந்த வழிபாடு என்று அதைச் சொல்லவேண்டும். மனதில் பயமுள்ள வரையில் அன்பென்பது எப்படி யிருக்க முடியும்? அன்பு என்பது பயத்தையெல்லாம் ஒழித்துவிடத்தக்கதாயிற்றே. குழந்தையைப் பெற்ற ஒரு யுவதி தெருவில் இருக்கிறாள் அவளைப் பார்த்து ஒரு நாய் குரைத்தாலும் அவள் பயந்து அடுத்த வீட்டிற்குள் போய் ஒளிந்துகொள்கிறாள். இவ்வித பயம் கொண்ட யுவதி தன் குழந்தையுடன் தெருவில் நிற்பதாகவும், அப்போது ஒரு சிங்கம் வந்து குழந்தையின்மீது பாய்வதாகவும் வைத்துக்கொள்ளுங்கள். அப்போது தாயார் எங்கு செல்வாள்? குழந்தையைக் காப்பாற்றவேண்டிச் சிங்கத்தின் வாய்க்குள்கூட இருப்பாள் என்று சொல்வதில்

சந்தேகமே வேண்டாம். அன்பென்பது பயத்தை யெல்லாம் ஓட்டிவிடுகிறது. ஜகத்திலிருந்து தான் வேறு என்று பிரிந்து நிற்கும் காரணத்தால்—தன்னலமிக்க எண்ணத்தால்—பயம் என்பது ஜனிக்கிறது. என் மனதைக் குறுகியதாகச் செய்துகொண்டு, நான் அதிகமாகத் தன்னலமுடையவனாக ஆனால், என்னிடம் அதிக பயமும் குடிகொள்ளும். தான் எதற்கும் பிரயோசனமில்லாதவன் என்று ஒருவன் நினைத்துக்கொண்டால் அவனிடம பயமென்பது இயற்கையில் ஏறபடும். எவ்வளவுக் கெவ்வளவு அநத எண்ணத்தைக குறைத்துக்கொள்கிறீர்களோ அவ்வளவுக்கவ்வளவு பயமும குறையும். பயமென்பது சிறிது கூட இருககுமானால் உங்களிடம அப்போது அன்பென்பது விளங்காது. அன்பு என்பதும் பயம என்பதும் சேர்நது வசிக்கமாட்டா ஆதலால், கடவுளிடம் அன்பு செலுததிவருகிறவர்கள் அவரைக்கண்டு பயப்படவேண்டியதே இல்லை. "உன கடவுளது நாமத்தை நீ வீணே ஏற்றுக கொள்ளாதே" எனற கட்டளையைக கண்டு மெய்யான கடவுள் பக்தன நகைப்பான். "அன்பென்னும மததத்தில் வேஷமெனபது எவ்வாறு ஏற்படும?" என்று பக்தன கேட்பான். கடவுள் பெயரை எவவழியாகவேனும ஏற்றுக்கொள்வது நலத்தையே செய்துவிடும். மெய்யான பக்தன் கடவுள் நாமததை அடிககடி உச்சரித்துககொண்டிருப்பான். அதுவே அவனுக்கு பிரீதியான வஸ்து.

அன்பில் போட்டி என்பதும் இருக்க முடியாது. இது அன்பென்ற முக்கோணத்தில உள்ள மூன்றாவது கோணம். போட்டி என்னும் சித்தம் ஏற்படாமலிருககவேண்டும். இநத லட்சணமே மூன்றாவது அமசம. அன்புடன்கூடவே அன்பு செலுததுகிறவனது உன்னத லட்சியமும் இணைந்திருக்கிறது. நாம அன்பு செலுத்துமபொருள் நமது உன்னத லட்சியமாக ஆகுமவரையில் உண்மையான அன்பு நமககு ஏற்பட முடியாது பல தடவைகளில் மனிதரது அன்பு தவறான இடங்களில் செலுத்தப்படுகிறது எனபது

உண்மையாக இருக்கலாம். ஆனால், அன்பு செலுத்துகிற வன் நோக்கத்தில் அம் மனிதனே தனக்கு உன்னதமான லட்சிய வஸ்துவாக ஆகிறான். மனிதர்களுக்குள் மிகக் கடைசி நிலையிலிருப்பவனிடம் ஒருவன் அன்பு செலுத்த லாம். ஆனாலும் எவ்வித நிலையிலும் அன்பு செலுத்துகிற வன் அவனிடம் தன் உன்னத லட்சியத்தையே காண் கிறான். இதுவே ரகஸ்யம். ஒவ்வொரு மனிதனுடையவும் உன்னத லட்சியம் கடவுள் என்று சொல்லப்படும். ஞானி யும் அஞ்ஞானியும், முனிவனும் பாவியும், மனிதனும் ஸ்திரீ யும், படித்தவனும் படிக்காத மூடனும், சிறந்த பயிற்சியுள்ளவ னும் இல்லாதவனும் ஆகிய ஒவ்வொரு மனிதனும் உன் னத நிலையிலுள்ள லட்சியமாயிருப்பது கடவுளே. அழகு, காமப்பிரியம், சக்தி முதலியவற்றின் அதியுன்னத பாவனைக ளின் சேர்க்கையே காருண்ய மூர்த்தியாகிய கடவுளின் நினைப்பை உண்டாக்குகிறது. இந்தப் பாவனைகளெல்லாம் ஏதேனும் ஒருவிதமாக ஒவ்வொருவர் மனத்திலும் இயற் கையில் அமைந்திருக்கிறது. ஒவ்வொருவருடைய சொரூ பத்திலும் இது கலந்தே நிற்கிறது. மனிதர்கள் செய்யும் காரியங்களின் தன்மையெல்லாம் இவ்வித பாவனைகள் அனு பவ வாழ்க்கையில் உண்மையாக வேண்டுமென்று அவர் கள் செய்யும் போராட்டங்களேயன்றி வேறில்லை. சமூ கத்தில் நம்மைச் சுற்றி நாம் பார்க்கும் கிளர்ச்சிகளெல்லாம் கூடி என்ன? பல ஜீவர்களிடமும் விளங்கும் இந்த லட்சி யங்கள் வெளிப்படக் காரிய ரூபங்களை (ஸ்தூல ரூபங்களை) ஏற்றுக்கொள்ள முயற்சி செய்வதன் பயனே யன்றி வேறல்ல. உள்ளேயிருப்பது வெளியில் வருவதற்காக மோதிக்கொண்டிருக்கிறது. எப்போதும் ஆதிக்கத்தைச் செலுத்திக்கொண்டு விடாமல் விளங்குவதாகிய லட்சிய வஸ்துவே—இந்த ஒரு சக்தியே, ஒரே எண்ணம்தான்—மனித சமூகத்தில் ஓயாமல் வேலைசெய்துகொண்டிருக் கிறது. "வெளிப்பிரபஞ்சத்தில் உள்ள நிலைமைகளை ஒழு ங்குபடுத்தி புறத்திலும் சமமாக்கி உள்ளேயிருக்கும் லட்சிய

வஸ்துவுடன் ஒத்து நடக்குமாறு செய்யும் முயற்சியெல்லாம் வீண்'' என்ற உண்மையை மனிதன் கண்டுபிடிக்க நூற்றுக்கணக்கான ஜன்மங்களும் ஆயிரக்கணக்கான வருஷங்களும் ஆகலாம். முடிவில் அவ்விதம் கண்டுதான் தீர வேண்டும். அதன்பிறகு அப்படிக் கண்டுபிடித்த மனிதன் தன் லட்சிய வஸ்துவை (சக்தியை) வெளியுலகில் செலுத்த முயற்சி செய்யமாட்டான். அந்த லட்சியத்தையே அன்பின் உன்னத நிலையிலிருந்து வணங்குவான்.

உண்மையில் பரிபூரணமான லட்சியப்பொருள் உண்டானால் அது கீழ்ப்பட்ட லட்சியங்களையும் தன்னுள் அடக்கிக்கொண்டிருக்கிறது. மிகக் குரூபியானாலும் அவளிடம் காதல் செலுத்திய புருஷன் அங்குத் தெய்வலோகத்து அரம்பையைத்தான் பார்க்கிறான் என்று எல்லோரும் ஒப்புக்கொள்கிறார்கள். வெளியே இந்த வேடிக்கையைக் காண்பவன் ''அங்கு அன்பு (காதல்) தவறான இடத்தில் சென்றது'' என்று கூறலாம். காதலனோ எப்போதும் எங்கும் அரம்பையைத்தான் பார்க்கிறான். குரூபி அவன் கண்களில் தோன்றுவதில்லை. ஏனெனில், ரூபம் எப்படியிருந்தாலும் தன்னால் விரும்பப்பட்ட பொருளைச் சுற்றிலும் தன் லட்சிய வஸ்துவின் அம்சமே சூழ்ந்துகொள்கிறது. அதன் உருவமாகவே அந்தப் பொருளும் ஆகிவிடுகிறது. சாமான்யமாக ஜனங்களுக்கு எதனிடம் அதிகப் பற்று ஏற்படுகிறதென்று இப்போது கவனிப்போம். எல்லாவற்றையும் தன்னிடம் அடக்கிக்கொண்டுள்ள பரிபூரண லட்சிய வஸ்துவாகிய பகவானது பரவஸ்துவல்ல என்று சொல்லிவிடலாம். சாதாரண மனிதர்களும் ஸ்திரீகளும் வணங்கும் சக்தி அவர்களிடமுள்ளதேயாம். ஒவ்வொருவனும் தன் லட்சிய வஸ்துவையே வெளியில் செலுத்தி அதற்குத் தண்டனிடுகிறான். ஆதலால், மிகக் குரூர குணமுள்ளவர்களும் பழி தீர்த்துக்கொள்ள விரும்புகிறவர்களும் வணங்கும் கடவுளிடமும் அதே குணங்களைக் கற்பித்து விடுகிறார்கள். இதுதான் இயற்கையில் ஏற்பட முடியும்.

அவர்கள் தம் உன்னத லட்சியத்தைத்தான் வணங்க முடியும். அதுபோலவே, நல்லோர்களுடைய கடவுளும மிகச் சிறநத லட்சிய வஸ்துவாக இருக்கிறது. இவர்களுடைய லட்சிய வஸ்து மற்றவர்களுடைய லட்சியங்களிலிருநது மிகவும் வேறுபட்ட குணங்களுடன் கூடியிருககிறது.

எட்டாவது அதிகாரம்

# அன்பின் சொரூபமே கடவுள்

தன்னலமிக்க சிந்தைகளுக்கப்பாற் சென்ற பக்தனைப்பற்றி இப்போது கவனிப்போம். அன்பு விஷயத்தில் பேரம் செய்வதும வர்த்தகம செய்வதும் அவனிடம கிடையாது. கடவுள் சமபநதப்பட்ட வரையில் பயமென்ற உணர்ச்சியே அவனிடம கிடையாது. மகத்தான கடவுளிடத்திலும இவ்வித மனிதன் "எனக்குச் சொந்தமானவற்றையெல்லாம் உனக்கே அளித்துவிட்டேன். எனககுச் சொநதமென்று எதையும சொல்லிககொள்ளக் கூடியதாக இல்லை அப்படியிருநதும் உன்னிடமிருநது நான் எதையும வேண்டவில்லை.'' எனறு சொலலிவிடுவான். இவ்வித உன்னத நிலையை அடைந்தவுடன் மனிதன் கொண்டுள்ள லட்சியம பரிபூர்ண அன்பு (பக்தி) ஆகிறது. அதனிடம் பிரத்தியேகமான குணமெதுவும இருநதுவிடாது. எங்கும நிறைநத அன்பாக யாதொரு குறையுமின்றி அகண்ட பரிபூர்ணத தன்மையை அடைகிறது. இவ்வளவு மகத்தான லட்சியததை ஆராதிப்பதற்கு அடையாளமெதுவும, பிம்பஙகள் எவையும வெளிக்கருவிகளாக பக்தனுக்கு வேண்டியதில்லை. ஆதலால், சகலத்தையும் தன்னுள் அடக்கிககொள்ளும அன்பே ஒருவனுககு இஷ்டலட்சியமாக ஆகும்போது அதை வணங்குவதுதான் பக்தியின் உன்னத சொரூபம இநத லட்சியததை நோககிச் செல்லும மார்க்கததில் இதர கொள்கைகளும பாவனைகளும் இருககின்றன. பக்தி மார்ககத்தைப் பின்பற்றும் போது, நமககு ஏறபடும வெற்றியும தோல்வியும் அந்த உன்னத லட்சியததை யனுபவிககச் செல்லும வழியில் உள்ளவை. ஒவ்வொரு விஷயமாக எடுததுககொண்டு

பக்தன் அவற்றினிடம் தன் லட்சியமாகிய பாவனையைச் செலுத்திப் பார்க்கிறான். முடிவில் "எப்போதும் பெருகிக் கொண்டே வருகிற ஆத்ம லட்சியத்தை விளக்கிக் காட்டுவதற்கு வெளி விஷயங்கள் தகுதியுடையவைகளல்ல" என்று அறிகிறான். ஆதலால், விஷயங்களெல்லாம் ஒன்றன்பின் ஒன்றாக ஒதுககப்படுகின்றன. வெளி விஷயங்களின் உதவியால் லட்சியத்தை யடைவது வீண் எனக் கண்டு சுயமான லட்சியத்தையே தியானிக்க ஆரம்பம் செய்கிறான். இவ்விதம் அப்பியசித்துக் காலக்கிரமத்தில் அதியுன்னதமானதும எல்லாவற்றிலும் நிரம்பியுள்ளதுமாகிய அன்பின் சொரூபத்தைப் பாவனையாகவே தனியே அனுபவித்தறியச் சகதி வாய்நதவனாகிறான். அதுவே அவனுக்கு மெய்ப் பொருளாக ஆகிறது. இந்த நிலைக்குப் பக்தன் எழுமபியவுடன் கடவுளுக்கு ருஜு உண்டா இல்லையா என்றுகூட பக்தன் கேட்பதில்லை. சர்வ சக்திமானா அல்லது சர்வஞ்ஞனா என்பதும தெரியவேண்டியதில்லை. இப்போது கடவுள் அவனுக்கு அன்பின் சொரூபம். அன்பென்ற உன்னதமான லட்சியப்பொருளாக இருக்கிறது. பக்தனுக்கு அதுவே எல்லாக் காரியங்களுக்கும போதும். காதலர்கள் தம் அன்புக்கு ருஜு தேடமாட்டார்கள்; அதுபோலவே, பகதனும் அன்பின் சொரூபமாக விளங்கும கடவுளுக்கு எவ்வித ருஜுவும் கேட்கமாட்டான். இதா மதங்களில் கடவுள் (சர்வ சக்திமான்) அதிகாரம் வகித்து வருவதற்குப் பல ருஜுக்கள் தேவையாக இருக்கலாம. பக்தனுக்கு இப்போது பக்தி பூர்த்தியானதும் அவ்வித கடவுள்களைத் தேடவேண்டிய அவசியமே கிடையாது. அவனுக்குக் கடவுள் சொரூபமெல்லாம் அன்பின் பூர்த்தியாகவே யிருக்கிறது. எல்லா வஸ்துக்களிடத்திலும் அநதர்யாமியாக இருக்கப்பட்ட ஆத்மவஸ்துவாகவே கடவுளைக் கண்டு ஆகந்தத்தால் பின்வருவாறு கூறுகிறான்:—"ஏ! அன்பனே! எவரும் புருஷனைப் புருஷன் என்பதற்காக விருமபவில்லை. அவரிடம் விளங்கும் ஆத்மவஸ்துவிற்காகவே புருஷனிடம்

அன்பு செலுத்தப்படுகிறது. மனைவியை மனைவிக்காகவே எவரும் இச்சிப்பதில்லை. மனைவியினிடம் விளங்கும் ஆத்மா விற்காகவே அவளிடம் அன்பு செலுத்தப்படுகிறது.”

“மனிதருடைய செய்கைகளுக்கெல்லாம் காரணம் தன்னல மொன்றே” என்று சிலர் கூறுகின்றார்கள். அதுவும் கூட அன்பேயாம். அன்பென்பதன் கீழ்ப்பட்ட தன்மையென்று அதைச் சொல்லலாம். நான் ஜகத் பொதுவான சமஷ்டியென்று அனுபவத்தா லறிந்த பிறகு எனது அன்பு கூட ஜகத்வியாபகமடைந்து தன்னலமற்ற தன்மை ஏற்படுகிறது. தவறுதலாக நான் சிறு பிராணியென்று நினைத்துக்கொண்டேனானால் அந்த சமஷ்டியினின்று வேறுபட்டவனாகி என் அன்புகூடக் குறுகிவிடுகிறது. அன்பு செலுத்தப்படும் இடத்தையும் சிறியதாகக்கொண்ட பிறகு அந்தத் தவறு தடித்துவிடுகிறது. ஜகத்திலுள்ள எல்லா வஸ்துக்களும் கடவுளிடமிருந்தே உற்பத்தியாகின்றன. அதனால் எல்லாவற்றினிடமும் அன்பு செலுத்த வேண்டியது அவசியம். ஆனால், சமஷ்டியினிடம் செலுத்தப்படும் அன்பு வியஷ்டிகளையும் சேர்த்துக்கொள்கிறதல்லவா? இந்த ஜகத் முழுமையும் சேர்ந்த சமஷ்டியே உன்னத ஸ்தானத்தையடைந்த பக்தனுடைய கடவுள். சுவர்க்கத்திலுள்ள பிதா, ஆளுகிறவர், சிருஷ்டி கர்த்தா முதலிய பாவனைகளெல்லாம், பலவித மதக்கொள்கைகளும் சித்தாந்தங்களும் சாஸ்திரங்களும் அர்த்தமில்லாத வீண் விஷயங்களெனவே பக்தனுக்குத் தோன்றும். அவர்கள் தம் பராபக்தியினாலும் தெய்வ வழிபாட்டினாலும் இவற்றிற்கெல்லாம் மேலாகக் கிளம்பிவிட்டார்கள். ஹிருதயம் பரிசுத்தமாகித் தெளிவான நிலையை அடைந்தால், அன்பென்ற தேவாமிர்தம் ஹிருதயத்தில் நிறைந்து ததும்பும்போது, கடவுள் அன்புமயம் என்பதைத் தவிர வேறு எவ்வித பாவனையும் போதுமானதல்ல என்றும் பயனற்றதென்றும் தோன்றிவிடும். ஆதலால், அவற்றைப் பக்தன் தள்ளிவிடுவான். பராபக்தியின் சக்தி இவ்வளவு மகிமை பொருந்தி

யது. பரிபூர்ண பக்தன் கடவுளை எங்கும் காண்கிறான்; ஆதலால், கோவில்களிலும், புண்ணிய பீடங்களிலும் சென்று கடவுளைத் தேட பக்தன் செல்வதில்லை. கோவில் களிலிருப்பதுபோலவே வெளியிலும் இருப்பது கடவுளே யென்று அவன் அறிகிறான். முனிவருடைய மகிமையிலும் துஷ்டனுடைய துஷ்டச செயலிலும் பக்தன் கடவுளையே காண்கின்றான். ஏனெனில், பக்தன் தன் ஹிருதயத்திலேயே சர்வசக்தி பொருந்தி ஒருபோதும தணியாத ஜோதியாகக் கடவுளைப் பெருமையாக ஸ்தாபித்துககொண்டிருக்கிறான். நித்தியமாக அது நின்று எப்போதும பிரகாசித்துக்கொண் டிருக்கிறது.

ஒன்பதாவது அதிகாரம்

# பக்தி என்ற திவ்ய லட்சியத்தின் சில பிரதிகள்

பராபக்தி என்ற லட்சியத்தின் சுபாவ மின்னதென்று மானிட பாஷையில் விளக்க முடியாது. அந்த பக்தியின அகண்ட பரிபூரணததன்மையின் அழகை முற்றிலும் கிரகிப்பதற்கு எவ்வளவு உன்னதமான மனோபாவனையாலும் முடியாது. ஆனால், எல்லாத் தேசங்களிலும் பக்தி மதத்தைப் பின்பற்றுகிறவர்கள் பக்தியில் உன்னத நிலையையும் கீழ்ப்பட்ட நிலையையும் அறிவதற்கு இநதக் குறைவுபட்ட மானிட பாஷையைத்தான உபயோகிக்கவேண்டியிருக்கிறது. இவ்வளவுடன் அவர்கள் விட்டுவிடுவதில்லை. வாக்கிற்கெட்டாத இநதத் திவ்ய அன்புசொரூபத்தை மானிட அன்பின் பலவகையான பாவனைகளாலும் சுட்டிககாட்ட விரும்புகிறார்கள். தெய்வீக விஷயங்களையும மனிதன் தன் மானிட இயல்புள்ள வழியிலேதான் சிந்திக்க முடியும்; பரிபூர்ண பிரமமசொரூபததையும் ஏறத்தாழ உள்ள உலக விஷயங்களுடன் சேர்த்துககித்தான் விளக்கமுடியும. எல்லைக்குட்பட்டதாக இருககும் சொரூபங்களின் பாஷையில் அகண்ட சுதநதிரவஸ்து வரையப்பட்டதென்று சொல்ல முடியுமானால் அதுவே இந்த ஜகத்தாகும். ஆதலால், கடவுளைப்பற்றியும் அவரை வழிபடுதலைப பற்றியும பேசும் போது பகதர்கள் சாமான்ய மானிட அன்பின் தன்மைகளையே உபயோகிக்கிறார்கள். பராபக்தியைப்பற்றி எழுதியிருக்கும பெரிய ஆசிரியர்களில் சிலர் பல வழிகளில் தெய்வத்தனமை பொருந்திய அன்பை அனுபவிதது விளக்கிக் காட்ட முயன்றிருககிறார்கள். அவை பின்வருமாறு :—

## லட்சியத்தின் சில பிரதிகள்

அமைதி பொருந்திய சாந்தம் என்ற வழியில் அன்பை அறிவதுதான் கடைசிப் படியிலுள்ளதாகும். அன்பென்ற ஜுவாலையில்லாமல் ஒரு மனிதன் கடவுள் வழிபாடு செய்தானால், அமைதியுடன் கூடிய சாமான்ய அன்பாகவே அவனது அன்பு இருந்தால், ரூபங்கள்-கிரியைகள்-பாவனைகள் என்றவைகளைக் கவனிப்பதினின்றும் சிறிதளவு மாத்திரமே உயர்ந்திருந்தால், அதிதீவிரமான சுறுசுறுப்புடன் கூடிய அன்பு என்ற வெறியில்லாமலிருந்தால், அப்போது ஏற்படும் அன்பிற்குத்தான் சாந்தம் என்று பெயர். உலகில் சிலர் மெதுவாகச் செல்ல விரும்புகிறார்கள்; மற்றும் சிலர் சுழற்காற்றுப்போல வந்து போய்விடுகின்றனர். முதற்சொல்லியவர்களைப்போல் சாந்த பக்தாகள்: அமைதியாகவும், சாந்தமாகவும், மிருதுவான தன்மையுடன் கூடியவர்களாகவுமிருக்கின்றார்கள்.

இவர்களுக்கு அடுத்தபடியாக இவர்களைவிடத் திறமாக இருக்கப்பட்டவர்கள் தாஸ்ய பக்தர்கள்; அதாவது, ஊழியம் செய்பவர்கள் என்று பொருள். கடவுளின் ஊழியன் என்று மனிதன் தன்னைப் பாவித்துக்கொள்ளும்போது இவ்வித பக்தி யேற்படுகிறது அப்போது கடவுளை வணங்குவதற்கு விசுவாசமுள்ள வேலைக்காரன் தன் எஜமானனிடம் காட்டும் அன்பே லட்சியமாக அவனுக்குத் தோன்றுகிறது. சக்யம் அல்லது நட்பு என்பதே அடுத்த படியில் மேலே உள்ளது. "துவமேவ பந்துஸ்ச ஸகா த்வமேவ" என்று இந்த லட்சியத்தைப் பின்பற்றுகிறவன் சொல்கிறான். "அன்பு மிக்க நண்பன் நீயே" என்பது இதன் பொருள். ஒரு மனிதன் தன் நண்பனிடம் தன் ஹிருதயத்தை ஒளியாது காட்டுவதுபோல, இவனும் கடவுளிடம் தன் ஹிருதயத்தை அவிழ்த்துவிடுகிறான். தன் குற்றங்களுக்காகத் தன்னை நண்பன் கண்டிக்காமல் எப்போதும் உதவி செய்வான் என்பதை இந்த பக்தன் அறிகிறான். கடவுளுக்கும் பக்தனுக்குமுள்ள இவ்வித சம்பந்தத்தில் சமத்துவ உணர்ச்சியும் பரஸ்பர அந்நியோந்ய பாவனையும் விர்த்தி

யாகின்றது; ஒரு மனிதனுக்கும் அவனது நண்பனுக்கும் ஏற்படும் சம்பந்தத்திலும் இவ்வித உணர்ச்சியே காணப்படுகிறது. இவ்வித பக்தியை லட்சியமாக அடையும்போது தெய்வத்தை வணங்குகிறவனுடைய ஹிருதயத்தினின்று வெளிப்பாயும் அன்பின் தன்மை இதுவே. இந்த நிலையில் உறுதியாக நிற்க முடியுமானால் கடவுள் நமக்கு ஒரு நண்பனைப்போல நின்று எப்போதும் அருகிலிருப்பார்; தாராளமாக நம் மனத்திலுள்ள ரகஸ்யங்களையெல்லாம் வெளியிடலாம், அவருடைய உதவியும் பலமும் நமக்கு நிச்சயம் கிடைக்கும். இவ்விதம் கடவுள் நமக்குச் சமமான நண்பர் ஆகி வாழ்க்கை என்று சொல்லப்பட்ட இந்த விளையாட்டில் நமக்கு மிக நெருங்கிய சகாவாக ஆகிறார்.

நாமெல்லோரும் இந்த ஜகத்தில் கடவுளுடன் விளையாடிக்கொண்டிருக்கிறோமென்று தாராளமாகச் சொல்லிவிடலாம். குழந்தைகள் தமக்குத் தகுந்த விளையாட்டுக்களை விளையாடுவதுபோலவே பெரிய மனிதர்களும் தமக்குத் தகுந்த விளையாட்டுகளை உடையவர்களாயிருக்கிறார்களல்லவா? அதுபோலவே, அன்பு செலுத்தப்பட்ட கடவுளும் அவருக்குச் சொந்தமான விளையாட்டுகளை உடையவராகிறார். விளையாட்டாக இந்த ஜகத்தை சிருஷ்டிக்கிறார். அவர் சிருஷ்டி செய்வதற்கு வேறு எவ்வித எண்ணமும் அவரிடம் இருப்பதாக உன்னால் கற்பிக்க முடியாது. ஏனெனில், அவர் பரிபூரணர்; அவருக்கு எவ்வித தேவையுமில்லை. அப்படியிருக்க அவர் ஏன் சிருஷ்டி செய்யவேண்டும்? சில தேவைகளைப் பூர்த்தி செய்துகொண்டே நம்மிடம் சுறுசுறுப்பு இருக்கின்றது. தேவையிருக்கிறதென்றபோதே பூரண பூரணத்தன்மையில்லையென்கிறது. கடவுள் பூரணரும் தேவைகளற்றவருமாயிருந்தால் அவர் ஏன் சுறுசுறுப்புடன் இந்தச் சிருஷ்டி காரியத்தில் இறங்கவேண்டும்? அப்படிச் செய்வதில் அவர் எந்தக் காரியத்தை நோக்கமாகக் கொண்டுள்ளார்? இந்தக் காரணத்திற்காக, இந்த எண்ணத்தை முடிப்பதற்கு, கடவுள் உலகைச் சிருஷ்டித்தார் என்று சொல்லப்படும் கதைகள் நல்ல கதைகளாக இருக்க

லாம். அவற்ருல் வேறு காரியம கிடையாது ஆதலால், கடவு ளுக்கு விளையாட்டாக மாத்திரம உலகம சிருஷ்டிக்கப்பட் டிருககவேண்டும; இபபோது அவருடைய விளையாட்டிற் காகவே உலகம் நடைபெறுகிறது. ஆமாம்! அதுவே உண்மை. ஜகத் முழுமையும் அவருககு இனிமையைக் கொடுக்கும் வேடிக்கையாகவே இருககவேண்டும. ஆதலால், பக்தன இவவாறு உஙகளுக்குச் சொல்கிருன் :—விளையாட் டிற்கு ஏற்பட்ட நிதயமான சகாவாகவே கடவுளைப் பாவித்து அவரிடத்து அன்பு செலுத்துஙகள். எது நடந்தாலும் அவன் கூத்தென்று அதைப் பாராட்டுங்கள். நீங்கள் ஏழைக ளாளுல் அதுவும அவனது வேடிககையென்று அனுபவி யுங்கள். நீங்கள் தனவநதர்களாளுல் அதையும வேடிக்கை யென்று அனுபவியுங்கள். ஆபதது வநததாளுல் அதுவும் ஒரு நல்ல வேடிககைதான். சுகானுபவம ஏற்பட்டால் அதிகமான நன்மை பொருநதிய வேடிககையாகும். உலகம் ஒரு விளையாட்டுப் பூமி என்றும, அதில எப்போதும கடவு ளுடன் விளையாடுகிருேம் என்றும எண்ணுஙகள். எவ்வளவு அழகாக நிததியததன்மையுடன் கூடிய சகா விளையாடிக் கொண்டிருககிருன் பாருஙகள்!! இந்தச் சதுர்யுகம் முடி வடைநததும விளையாட்டு முடிவு பெற்றுச் சிறிது காலம் ஓய்வு ஏறபடும். மறுபடியும இதே விளையாட்டுத திரும்பி ஜகததும அதன்கண் உள்ள சகல வஸ்துககளும் மீண்டும் தோன்றி அவருடன் விளையாட முன்வரும். இவ்விதமே எல்லாம் நடைபெறுகின்றன. எல்லாம் விளையாட்டு என் பறை மறநது, நீங்களும மற்ற ஒவ்வொரு வஸ்துவும் கடவு ளின் இந்த விளையாட்டிற்கு உதவி செய்வதாக நினைக்கும் போது மாத்திரமே துக்கமும் மனவேதனைகளும உற்பத்தி யாகின்றன ; ஹிருதயம் பாரமாக ஆகின்றது ; உலக விஷ யங்கள் மகத்தான சகதியுடன் உங்களை வாட்டிவிடுகின்றன. மெய்ப்பொருளுககே சொநதமான சததியத்தன்மையை, மூன்று நிமிஷ வாழ்க்கையாகிய இவ் வாழ்க்கையில் நேரும் மாயாவிஷயங்களிடம் செலுத்தாமல் விட்டுவிட நீங்கள்

வல்லவராகும்போது துக்கம் என்பது உங்களுக்கில்லை யாகின்றது அணுக்களைக்கொண்டு கடவுள் விளையாட்டுப் போல் பூமிகளையும் மானிட ஹிருதயங்களையும் உருவாக்கிக் கொண்டுவரும் கடவுளைக் காண்பாயாக! அவர் கைகளில் நாமெல்லோரும் சொக்கட்டான் காய்களைப்போன்ற மனிதர்கள் என்று பாவனை செய்யுங்கள். நம்மை அவர் தம் இஷ்டம்போல் முதலில் ஒரு விதமாகவும் பிறகு வேறுவிதமாகவும் வைக்கிறார். இவ்விதம் அவர் நடத்தும் விளையாட்டிற்கு நாம் அறிந்தோ அறியாமலோ உதவி செய்கிறோம் இவ்வித விளையாட்டில் நாமும் கடவுளும் சகாக்கள் என்று நினைக்கும்போது ஆகா! எவ்வித ஆனந்தம் ஜனிக்கிறது!

வாத்ஸல்யம் என்பது அடுத்தபடியாக மேலே உள்ளது. இதில் கடவுளை மாதாவாகவோ பிதாவாகவோ பாவித்து அன்பு செலுத்தாமல் நமது குழந்தையாகவே அவரைக் கருதி அன்பு செலுத்தப்படுகிறது. இது விநோதமாகத் தோன்றக்கூடும். கடவுளிடம் சக்திகள் இருக்கின்றன என்ற பாவனைகளை நாம் நீக்கும்படி செய்துகொள்வதற்கு இந்தப் பழக்கம் அவசியமாகிறது. அதிகாரம் அல்லது சக்தி யிருக்கிறதென்று சொல்லும்போது கூடவே பயமென்பது உண்டாகிறது. 'கடவுளிடம் அன்பு செலுத்தும்போது யாதொரு பயமும் ஏற்படலாகாது என்பதே லட்சியமல்லவா? பக்தனிடம் மேலான குணம் படிவதற்குமுன் மரியாதையும் கீழ்ப்படியும் குணமும் அவனுக்கு வேண்டும். ஆனால், அவ்வித குணம் ஸ்திரப்பட்டவுடன், பக்தன் தன்னிடம் அமைதியான சாந்தகுணம் மிக்க அன்பை அனுபவித்த பிறகு சிறிது பக்தி வெறியும் கொண்டானானால் பிறகு அவனுக்கு நீதிபோதனையும் வேண்டாம்; சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட விதிகளின்படி நடந்தே தீரவேண்டும் என்பதும் வேண்டியதில்லை. மகத் சக்தியும் காம்பீரியமும் பெருமையும் பொருந்தப்பெற்று ஜகத் கர்த்தா என்ற கடவுள் அவ்வித நிலைக்கு எழும்பிய மனிதனுக்குத் தேவையில்லை. தேவாதிதேவன் என்ற அடைமொழியும் அவனுக்கு வேண்டாம். பயத்தை யுண்டாக்கும்படியான சக்தி

# கூ-வது அதி.—பக்தி என்ற திவ்ய ககன லட்சியத்தின் சில பிரதிகள்

கடவுளிடம் இருக்கிறதென்ற பாவனையே மனதில் தோன்றக்கூடாது என்பதற்காகத்தான் கடவுளைத் தன குழந்தையாகப் பாவித்து வணங்குகிறுன. குழநதையினிடம அன்பு செலுததும்போது மாதா பிதாககள் பயம என்ற உணர்வினுல் தூண்டப்படுவதில்லை; குழநதையினிடம மரியாதை என்ற பாவனையும ஏற்படுவதில்லை. குழநதையின் தயவை எவ்விததகிலும் அவர்கள எதிர்பார்க்க முடியாது. குழநதை விஷயமாகப பெற்ருேர்கள எபபோதும கொடுககின்ற நிலையிலேயே இருப்பார்கள் ; பிரதியாக எதையும் அடைய மாட்டார்கள். குழநதையினிடம ஏற்படும் அன்பு காரணமாகப பெறருோகள் தம சரீரஙகளையும நூறு தடவைகூட விடத தயாராயிருப்பார்கள். குழநதைககாக உண்மையில் ஆயிரம ஜன்மமும எடுக்க விருமபுகிறவர்களு முண்டு. இவ்வித தீவிரமான அன்புடன் பகதனும தன் கடவுளிடம் அனபு செலுத்தப் பார்க்கிறுன். அதனுல் அவன எண்ணத்தில் கடவுள ஒரு குழநதையாகத தென்படுகிருர். இவ்வாறு கடவுளைக குழநதையாகப் பாவித்து வணங்கும பாவனை உற்பததியாகித தானே வளர்நது வநதது. முகம்மதியர்களுககுக கடவுளிடம இவ்வித பகதி ஏற்பட்டு வளர முடியாது. அவ்வித பாவனையைக கண்டு அவர்கள் நடுங்கிவிடுவார்கள். கிறிஸ்தவ மததகில் ஏசுநாதா குழநதையாக வளர்நததும, ஹிந்து மதததில் ஸ்ரீ கிருஷ்ண பகவான் குழந்தையாக வளாநததும கதைகளாக வழஙகி வருகின்றன. ஆதலால், அநத மதஸ்தர்கள் இலகுவாக இவ்வித பாவனைகளை அனுபவிகக முடியும. இநதிய பெண்மககள் தம்மைக் ஸ்ரீ கிருஷ்ணனுடைய தாய்கள்போல் பாவித்துககொள்வதுண்டு. கிறிஸ்தவ மதபபெண்மணிகளும இவ்விதம் தம்மை ஏசுநாதரின் தாய்கள் எனப் பாவிககலாம். இவ்வித பாவனை மேனுடுகளுக்குள் வளர்ந்துவநதால தெய்வ சொரூபம் பொருநதிய தாய் என்ற ஞானம அத்தேச ஜனஙகளுக்கு ஏற்பட்டு அவர்கள் மேனமை யடைவார்கள். இதுவும் அவர்களுககு அதிக அவசியமானதாக இருக்கிறது.

ஆனால், இது மிகக் கடினம. கடவுளிடம் மரியாதை, பயம் என்ற மூட பக்திகள் நம ஹிருதயங்களில் ஆழமாக ஊன்றி நிற்கின்றன. அவற்றை முற்றிலும இநத அன்பென்ற லட்சியததிற்குள் அழுந்திவிடுமாறு செய்வதற்கு நீண்ட காலமாகும.

அன்பைப்பற்றிய மானிட லட்சியங்களில் இன்னும் ஒரு பாவனை மீதியிருக்கிறது. மதுரம் அல்லது இனிமை யென்பது அதன் பெயர் மானிட பாவனைகளுள் இதுவே உயர்ந்தது. இவ் வுலகில மனிதன் அறியககூடிய அனபின் ஆவிர்ப்பவங்களுள் அதியுன்னதமானதும பலம் பொருநதிய தும் இதுதான். மனிதனது முழு சுபாவத்தையும் கலங் கச்செய்து அவன் தேகத்தின ஒவ்வொரு அணுவினுள்ளும் ஊடுருவிப்பாய்நது அவனை வெறிபிடிக்குமாறு செய்வதெது? தன்னையே முற்றிலும மறக்குமபடிசெய்து, தன் முழுகுணத் தையும மாற்றிவிடத் தக்கதாய் ஒரு தெய்வமாகவோ பைசாசமாகவோ தன்னை மாற்றககூடிய சகதி எது? அது தான ஸ்திரீ புருஷர்களுககுள் ஏற்படும அன்பு. தெய்வத்தி னிடம் இவ்வித இனிமைபொருநதிய அன்பு செலுத்தப் படுமபோது கடவுள் புருஷ ஸ்வரூபத்தில் வணங்கப்படு கிறார். இவ்வித லட்சியததை ஏற்றுககொள்ளும் பகதன் 'கடவுள் ஒருவரே உலகில் புருஷன் என்று சொல்லத் தகுதி யுடையவர்' என்று நினைககிறான். அவருடன் சேர்த்துககிப் பார்க்குமபோது நாமெல்லோரும் (ஜீவர்களெல்லாம்) ஸ்திரீ களுக்குச சமம. ஆதலால், உலகில புருஷன் ஸ்திரீயினிட மும ஸ்திரீ புருஷனிடமும செலுததும் அன்பெல்லாம கடவு ளிடமே செலுத்தப்படவேண்டும. உலகில் தோன்றுகிற வெவ்வேறுவித அன்புகளெல்லாம்—நாம அவற்றோடு அநேகமாக வீண் விளையாட்டுககள் விளையாடுகிறோமென்று சொல்லவேண்டும், அவவித அன்பெல்லாம்—உண்மையில் ஏகவஸ்துவாகிய கடவுளையே லட்சியமாகக்கொண்டு விளங்கு கிறது. அன்பென்று சொல்லப்படும் இநத மகத்தான நதிகள் போய்ப் பாய்கின்ற அகண்டமான சாகரத்தின் தன் மையை மனிதன் அறிகிறதில்லை. ஆதலால், அஞ்ஞானத்

தால் சிறு பொம்மைகளாக உள்ள மானிட தேகங்களிடம் அன்பைச் செலுத்த முயற்சி செய்கிறான். குழந்தைகளிடம் செலுத்தப்படும மகத்தான அன்பு அந்தச சிறு குழந்தையாகிய பொம்மையினிடம் ஏற்பட்டதல்ல. குருட்டுத்தனமாக அந்தக் குழந்தையினிடம் மாத்திரமே நீங்கள் செலுத்தினீர்களானால், உங்களுக்குக கஷ்டமே ஏற்படும். ஆனால், இவ்வித கஷ்டங்களின் பயனாக நீங்கள் அறிவை அடைவீர்கள். உங்களிடம் ஏற்படும் அன்பென்ற உணர்ச்சியை எந்த மனிதரிடமாவது செலுத்தினால் உங்களுக்கு எப்போதாவது துக்கமும் துன்பமும ஏற்பட்டே தீரும் என்று நீங்கள் அறிவீர்கள். ஆதலால, ஒப்புயர்வற்ற ஏக வஸ்துவினிடம நாம் அன்பு செலுத்தவேண்டும். அந்த வஸ்துவிற்கு மாறுந்தன்மையு மில்லை, மரணமு மில்லை. அதன் காருண்யக் கடலில் அலையு மில்லை, ஓட்டமு மில்லை. சாந்தமய மாகிய கடலே அது. உண்மையில் அகண்ட ஸ்வரூப மாகிய அன்பின சாகரமே கடவுள் ஆதலால் நம்மிடமுள்ள அன்பிற்கும் சரியான எல்லை அல்லது முடிவு அந்தப் பரம பீடமே. மலைச்சரிவுகளில் பளபளப்பாகத் துள்ளிபோடும் நீர்த்துளிகள் ஒரு பெரிய நதியைச் சேர்ந்த பிறகு— அங்குத் தங்காமல எவ்வழியாகவோ கடலுக்குப் போய்ச் சேர்கின்றன. அதுபோலவே, நம் ஆசாபாசங்களும் உணர்ச்சிகளும் முடிவில கடவுள் என்ற ஒரே லட்சியத்தினிடம் போய்ச் சேரவேண்டியவைகளே. ஆதலால், உங்கள் உணர்ச்சிகளையெல்லாம் கடவுளிடமே செலுத்துங்கள்; அவரே அன்பு செலுத்தத்தக்க வஸ்து என்று அறியுங்கள். உங்கள் மனத்திலுள்ள நோக்கங்களை அவர் பூர்த்தி செய்வார். அவரிடம் அன்பின் எவ்வித பாவனையைச் செலுத்திய போதிலும் உங்கள் மனோரதங்களை அவர் முடிப்பார். அவரிடம கோபித்துக்கொண்டு அவரைக் கண்டிக்கவேண்டுமென்று தோன்றினால் அவ்வாறே செய்யுங்கள். அவரைத் தவிர வேறெவரையும் கண்டித்துவிட்டு நீங்கள் துன்பமின்றி இருக்க முடியுமா? அநித்தியனாகிய மனிதன் உங்கள்

கோபத்தைப் பொறுமையுடன் தாங்கி நிற்கமாட்டான். அவன் எப்போதாவது சமயம் பார்த்துத் திருப்பிவிடுவான். நீங்கள் என்மீது கோபம் கொள்வதாக வைத்துக் கொள்ளுங்கள். என் பொறுமைக்கு ஒரு எல்லையுண்டு; ஆதலால், உங்கள் கோபத்தை எப்போதும் தாங்க முடியாது. ஆதலால், உங்கள் அன்புக்குரிய கடவுளைக் கண்டியுங்கள் "நீயேன் இன்னும் என்னிடம் வரவில்லை. என்னை யேன் இவ்வாறு தனியே நிறுத்திவிடுகிறாய்?" என்று கோபித்துக்கொள்ளுங்கள். அவரிடமில்லாமல் வேறெங்குத்தான் சுகமுண்டு? சிறு மண்கட்டிகளிடத்தில் சுகமிருக்கமுடியுமா? அகண்ட சொரூபானுபவத்தின் சாரத்தையே நாம் தேடிச் செல்கிறோம். அது கடவுளிடம் மாத்திரமே கிடைக்கும். ஆதலாம், நம் ஆசாபாசங்களும் உணர்ச்சிகளும் அவரிடமே செல்லட்டும். அவைகள் கடவுளிடமே செல்ல வேண்டும். அந்த லட்சியம் தவறிக் கீழே செலுத்தப்பட்டால் அந்த குணங்கள் இழிவடைகின்றன. கடவுள் என்னும் லட்சியத்தை நோக்கி நேரே செலுத்தப்பட்டால் மிகத் தாழ்ந்த உணர்ச்சிகளும் பரமபதத்தைச் சேர்ந்து அழகு பெறுகின்றன. மானிடதேகம் மனம் என்ற இடங்களிலிருந்து வெளிப்படும் சக்திகள் எவ்வாறு விளங்கியபோதிலும் முடிவில் கடவுளைத்தான் ஏகாயனமாகக் கொள்கின்றன. கடவுளே எதற்கும் ஒப்பற்ற லட்சியம். காமப்பிரியமும் அழகும் பொருந்தியது எதுவோ அதுவே பக்தி செலுத்தத்தக்க வஸ்து. வேறு எவரிடம் நம் மனதால் அன்பு செலுத்த முடியும்? அவரைக் காட்டிலும் வேறு எவர் அதிக அழகு பொருந்தியவர்? அவரைக் காட்டிலும் வேறு எவர் புருஷராக வல்லவர்? அவரைவிட வேறு எவரிடம் அன்பு செலுத்தக்கூடும்? ஆதலால், அவரையே மிக்க கணவனாகக் கொள்வோம். இவ்வித பாவனையில் தெய்வ ஸ்துதி செய்யும்போது பக்தர்கள் மானிட அன்பின் பாஷைகளையே உபயோகிக்கிறார்கள் என்று முன்னமே சொல்லியிருக்கிறோம். அந்த உன்னத பக்தியை வேறு விதமாகப் பூரணமாய் வர்ணிக்க முடியவில்லை. இதை

மூடர்கள் அறிவதுமில்லை; அவர்கள் அறியவு முடியாது. அவர்கள் ஸ்தூலவிஷய சம்பநததை மாததிரமே அறி வாாகள்; ஆத்ம சமபநதமான காதல் (அன்பு) இவ்வளவு வெறிகொண்டதென்று அவர்களால் அறிய முடியாது. "உனது உதடுகளால ஒரே ஒரு முததம் கொடு; ஓ அனபனே! அநத உதடுகளை மூத்தமிட்டால் உன ஆவேசம் என்னிடம் இனிமையான வெறியை நிரமபுமாறு செய்து விட்டது. ஒரு தடவை அவற்றின் முத்தஙகளை அனுப வித்தவன் உன்னை எபபோதும விருமபுகிறுன. அவனுக்கு உன் அதரபானமம வேண்டுமென்ற தாசம அதிகரிககின்றது. அவனது துக்கங்கள் பறநதுபோயின. உலக சமபநதமான சிறு காதல்களையெலலாம மறந்தே போய்விட்டான்." என்று இவவாறு பகதன் வர்ணிப்பதை யெல்லாம் ஏதோ ஸ்தூல வஸ்து சமபநதப்பட்ட பொருளைப்பற்றி யென்று நினைக்கலாகாது. அதைச் சரியாக அறியவேண்டுமாஞல் காருண்ய மூர்த்தியாகிய அன்பனுடைய அதரபானத்தைப் பருகும ஆவல் கொள்ளவேண்டும். ஒரு மனிதனைத் தெய்வ மாகச் செய்வது எநத அதரங்களின் ஸ்பரிசமோ அவ்வித ஸ்பரிசததில் ஆசை கொள்ளவேண்டும். அவ்வித முத்தம் அடையபபெற்றவனுககுப் பிரகிருதி முழுமையும தன் குணததை மாற்றியதுபோலத் தோன்றும. சூரிய சநதிரர்க ளுடன் கூடிய உலகம் (ஸ்தூல உலகம்) மறைநதுவிடுகின் றது. ஜகத் முழுமையும ஒரே அனபின மயமாக ஆகின் றது. அன்பெனற வெறியின் பூர்ததி என்று அநத நிலை யைச் சொல்லிவிடலாம்.

உண்மையான ஆத்மபக்தியுள்ளவன் இவ்வளவுடன் நிற்பதில்லை. தம்பதிகளுககுள் ஏற்படும் அநநியோன்ய அன்புகூட அவனுககுப போதவில்லை. அவன் கள்ளக காதலையே தன் லட்சியமாகக கொள்கிறுன். இதன்கண் ஏற்படும் உணர்ச்சி மிகமிகப பலம் பொருந்தியதா யிருக் கிறது. இது தகாத காரியமென்பதுகூட அவன் திருஷ் டிககு விளங்குவதில்லை; அதை அவன் லட்சியமாக்கவில்லை,

அவ்வித காதலினிடம் உள்ள சக்தியும் அழுத்தமுமே அவனுக்குத தேவையாகின்றன. கள்ளக் காதலின் தன்மையே ஒரு விசித்திரம் பொருநதியது. எவ்வளவுக் கெவ்வெளவு இடையூறுகள் அதிகரிக்கின்றனவோ அவ்வளவுக்கவவளவு காதலும் பல மடைகிறது. தம்பதிகளுக்குள் ஏற்படும் அன்பு (காதல்) இலகுவாக இருக்கிறது. அது வளர்வதற்குப் பல இடையூறுகள் கிடையா. ஆதலால், அது சாந்தமாக ஏற்பட்டுவிடுகிறதென்று பகதன் அதைத் தள்ளி விடுகிறான். பிறகு ஒரு பெண் தன் கள்ளப புருஷனிடம் கொள்ளும் காதலைத் தன் லட்சிய மாககிககொள்கிறான். நாள்தோறும் இவள் காதல் பலமடைந்துவர மாதாபிதாக்களும் இவள் புருஷனும மற்றுமுள்ள பநதுக்களும் இடையூறுகள் செய்துகொண்டே வருகிறார்கள். கோபிகள் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவிடம கொண்டுள்ள அன்பை வர்ணிககும்போது ஸ்ரீமத பாகவததை இயற்றியவர் இவ்வித அன்பின் பாவனையைததான் லட்சியமாக்கியிருக்கிறார். அவரிடம செலுத்திய அன்பின் மிகுதியால் அவர்கள் திவ்ய ஞான மடைநது அவரே ஜகத் கர்த்தாவென்று அறியலானார்கள். பிருநதாவனத்தில் கோபிகள் எவ்வித வெறியுடன ஸ்ரீகிருஷ்ணனிடம காதல் செலுத்தினார்கள் என்பதை மானிட வாககால் வர்ணிக்க முடியாது. அவரது குரல் கேட்டவுடன் பகவானால் ரட்சிககப்பட்ட கோபிகள் அவரைச் சநதிக்கப் போட்டி போட்டுக்கொண்டு இவ்வுலக பந்தங்களையும கடமைகளையும் சுகதுக்கங்களையும் மறநதவர்களாய் ஓடிய விநதைதா னென்னே?

மானிடனே! திவ்ய சொரூபமான அன்பைப்பற்றி நீங்கள் பேசிவிட்டு இவ் வுலகதது வீண் டாம்பீகங்களையும கவனிககக சகதியுள்ளவரா யிருக்கிறீககளே! நீங்கள் உண்மையில் சிரத்தையுள்ளவர்களேயோ? "ராமனிருக்குமிடத்தில் இச்சைகளுககு இடமில்லை. இச்சை சிறிதேனுமிருககுமிடத்தில் ராமனுக்கு இடமில்லை. ஒளியும் இருட்டுமபோல் இந்த இரண்டும் சேர்ந்து நிற்பதில்லை."



## பத்தாவது அதிகாரம்



# ஏகத்துவமே முடிவு



உன்னதமான அன்பின் லட்சியம அனுபவிக்கப்பட்ட வுடன் தத்துவசாஸ்திரம தேவையில்லை ஆமாம்! அப் போது அதை யார் லட்சியம் செய்வார்கள்? சுதந்திரம, முக்தி, நிர்வாணநிலையாகிய எல்லாம் அற்பமானவைக ளென்று தள்ளப்படுகின்றன. அவ்வித தேவாமிருதம் போன்ற அன்பென்னும ஆநநதத்தில் மூழ்கியிருககும் போது யார்தான் சுதநதிரமடைய விருமபுவார்? "கடவு ளே! எனககுத தனம் தேவையில்லை; நண்பர்களும் தேவை யில்லை; அழகும் வித்தையும் சுதநதிரமும்கூடத் தேவை யிலலை; அடிககடி ஜன்மஙகள் உண்டாகட்டும்; ஆனால், என் அன்பனாக நீ யிருப்பாய்." ஆமாம! எப்போதும் நீயே எனக்கு இனிய துணைவனா யிரு. அதன் பிறகு நாம் எதை விருமபவேண்டும? "சக்கரையாகவே தான் ஆவ தறகு எவர் விருமபுவார்?" என்று பக்தன் சொல்கிறான். "நான் சர்க்கரையின் ருசியை உணரவேண்டும்." என்பான். ஆநநதமயமாகிய கடவுளின் இனிமையை நான் அனுப விக்கவேண்டும. ஆமாம்! கடவுளுடன் ஒன்றுபட்டுச் சுதந்திர மடையவேண்டுமென்று அநத நிலையிலுள்ள எவர் தான் விருமபமுடியும்? "நானே அவன் என்ற அனுபவ அறிவு எனக்கு ஏற்பட்டிருக்கலாம்; ஆனால், நான் அவனை விட்டு வேறாகி அன்பை அனுபவிப்பேன்" என்று பக்தன் சொல்லுவான். பிரதிபலன் வேண்டாமல் அன்பு செலுத் தும் ஆநநதமே மிக உன்னதமானது, அனபின் சொரூ பத்தை அனுபவிக்க ஆயிரம் ஜன்மங்கள் எடுத்துச் சரீர பந் தங்களையும மனோ பநதங்களையும் ஏற்றுக்கொள்ள விரும்பு கிறான். அன்பு செலுத்தி அதையே தான் அனுபவிப்ப

தைத் தவிர வேறெதையும் பக்தன் விரும்பவில்லை. உலக சம்பந்தமற்ற அவனது ஆனபின் பெருக்குச் சாமானய நதியின் பெருக்கை எதிர்த்து மோதுகிறது. உலக வாழ்க்கையி லுள்ளவர்கள் அவனைப் பைத்திய மெனகிறார்கள். அப்படிப்பட்ட ஒருவரை நானறிவேன். உலக ஜனங்கள் அவரைப் பைத்தியமென்று சொன்னபோது, அவர், "நண்பர்களே! உலகமுழுவதுமே பைத்தியக்கார நிரம்பிய இடம். இங்குச் சிலர், பெண்களின் காதலுக்கு வெறிகொண் டலைகிறார்கள். சிலர், பெயர் பெற்று விளங்கவேண்டுமென்று வெறி கொள்கிறார்கள். மற்றும் சிலர், புகழுக்காகவும்; வேறு சிலர், தனத்திற்காகவும்; வேறு சிலர், சுவர்க்கம் புகவேண்டுமென்றும், முக்தியடைய வேண்டுமென்றும் வெறி கொள்கிறார்கள். நான் கடவுளைத் தேடுவதில் வெறிகொள்கிறேன். நீ தனவெறி பிடித்தலைந்தால், நான் கடவுள் வெறி பிடித்தலைகிறேன். நீயும் பைத்தியம், நானு மப்படியே. எனது பைத்தியமே மிகச் சிறந்ததென்று நான் நினைக்கிறேன்." என்று பதில் கூறினார். இவ்விதம் எரிகின்ற வெறியுடன் கூடியதே உண்மையான பக்தனது வெறியாகும். இந்த வெறியின்முன் வேறெந்தப் பற்றும் அவனுக்கு இல்லையாகின்றது. ஜகத் முழுமையுமே அவனுக்கு அன்பின் சொரூபம். அன்பு மாத்திரமே அவனுக்கு எங்கும் காணப்படுகிறது. இவ்வித அன்பு ஒருவனிடம் ஏற்பட்டவுடன் அவன் நித்திய சந்தோஷியாகி எப்போதும் அனுக்கிரகிக்கப் பட்டவனாகிறான். தெய்வ சக்தியுடன்கூடிய இந்தப் பைத்தியம் ஒன்றே உலகத்தின்கண் சிறு விஷயங்களிடம் ஏற்படும் காமத்தையெல்லாம் போக்கி ஜீவனைச் சொஸ்தமடையச் செய்யும் சக்தி பொருந்தப்பெற்றிருக்கிறது.

அன்பென்ற மதத்தில் நாமெல்லோரும் துவைதிகளாக ஆரம்பம் செய்யவேண்டும். அப்போது நமக்குக் கடவுள் நம்மினும் வேறான புருஷர், நாமும் தனித்தனி வேறான மனிதர்களே யாவோம். இப்போது இடைவெளிகளை நிரப்ப அன்பு தோன்றுகிறது. அதன் பயனாக மனிதன் கடவுளை

நோக்கிச் செல்கிறான்; கடவுளும் இவனிடம் நெருங்கிக் கொண்டே வருகிறார். அப்போது மனிதன் தன் வாழ்க்கையி லேற்படும் உறவுகளாகிய பிதா, மாதா, புத்திரன், நண்பன், எஜமானன், காதலன் முதலிய பாவனைகளை ஏற்று அவற்றைக் கடவுளாகிய தன் அன்பின் லட்சிய வஸ்துவிடம் செலுத்து கிறான். கடவுள் அப்போது அவனுக்கு இவ்வித சொரூபங்க ளுடன் விளங்குகிறார். முடிவில் தான் வணங்கிய கடவுளுடன் இவன் பரிபூர்ணமாகக் கலந்துவிட்டவுடன் கடைசி நிலை ஏற் பட்டுவிடுகிறது. இவ்வாறு நாமெல்லோரும் முதலில் தன்னல மிக்க அன்புடன் ஆரம்பம் செய்து நம்மையே இச்சித்துக் கொள்கிறோம். அப்போது இந்தச் சிறு அகம் தகாத இச்சைகளை யெல்லாம் கொண்டுவந்து அன்பையும் தன்னல மிக்கதாகச் செய்துகொள்கிறது. ஆனால், முடிவில் அன் பென்ற ஜோதியின் பூரண ஒளியும் தோன்றிச் சிறிய அகம் பாவனையைக்கூட அகண்ட சொரூப அன்புடன் ஒன்று படுமாறு செய்துவிடுகிறது. இவ்வாறு அன்பென்ற ஜோதி முன் மனிதன் மாறுதலை யடைகிறான். தன் ஹிருதயத் தில் அநேகமாகக் குடிகொண்டிருந்த அழுக்குகளையும் வீண் இச்சைகளையும் பரிசுத்தம் செய்து ஏகத்துவ நிலையை அறிந்து அனுபவிக்கிறான். அன்பு, அன்பு செலுத்தியவன், செலுத்தப்பட்டவன் ஆகிய எல்லாம் ஒன்றே என்ற அழ கிய உண்மை அவன்முன் தோன்றிவிடுகிறது.

---

## பக்தியோகம்
## முற்றுப் பெற்றது.



Printed at the Guardian Press, 153-B, Broadway, Madras.

மாதர்களுக்கோர் சிறந்த போக்க்ஷம் வெளியாய்விட்டது!

புதிய பதிப்பு! **மாதர் நீதி** புதிய பதிப்பு!!

[மூன்று பாகங்கள்]

நூதன முறையின்படி திருத்தி அமைக்கப்பெற்ற
அழகிய 5-ம் பதிப்பு விலை ரூபா 1.
பேதர்வெயிட் பேபரில் அச்சிட்டு டக்ஸின் பயிண்டு ரூ. 1-8.

1. பள்ளிக்கூட முறைமை, 2. வீண் காலப்போக்கு, 3. துர் அப்பியாசங்கள், 4. உண்மை, 5. கீழ்ப்படிதல், 6. திருட்டுத்தனம், 7. வேடிக்கைப்பார்த்தல், 8. பரிசுத்தம், ஆக 8-வியாசங்கள், 6-கதைகள் அடங்கியிருக்கின்றன.

1. விவாகம், 2. நித்தியக்கடன்கள், 3. இல்வாழ்க்கை, 4. ஒற்றுமை, 5. கற்பு, 6. தர்மகுணம், 7. வீண்செலவு, 8. பிள்ளைகளைப் பயிற்றல், 9. விருந்தினரை உபசரித்தல், 10. உபகாரம். 11. பொறுமை மேன்மைப்படுத்துமென்பது, 12. பரங்கூறல் இகழ்ச்சியென்பது, 13. கண்டபடி திரிதல் பத்தியீனமென்பது, 14. பரபுருஷனை இச்சித்தல் மகா கொடியதென்பது, 15. வ்யபசாரிகளின் முடிவு, 16. சோம்பல் கேட்டைத்தருமென்பது, 17. அடக்கம், 18. பொறுமை தரித்திரத்தை யுண்டாக்கு மென்பது, 19. சுற்றத்தாருக்கிணங்க நடத்தல், 20. பொறாமை பெருநஷ்டமென்பது, 21. துன்மார்க்கபுருஷரை சன்மார்க்கத்தில் திருப்புதல், 22 மனைவியின் பதிபக்தியினால் கணவனுக்கு நேரிட்ட ஆபத்து நீங்கியது (அதாவது, கணவருக்குச் சமயத்தில் தக்க போதனை சொல்லிக் காப்பாற்றுதல்), 23. பெண்பிள்ளைக் கல்வியின் உபயோகம், ஆக 23-வியாசங்கள், 12-கதைகள் அடங்கியிருக்கின்றன.

1. முதுமையில் ஸ்திரீகளுக்குண்டாகும் துர்க்குணங்கள், 2. ஸ்திரீகள் தம் மருமகள்மாருக்குச் செய்யும் கொடுமைகளும் அவற்றின் விளைவும், 3. ஸ்திரீகள் தங்கள் மருமகள்மாரை நடத்தவேண்டிய நல்வழிகள், 4. ஸ்திரீகள் முதுமையில் கவனித்து நடக்கவேண்டிய முறைமைகள், 5. ஸ்திரீகள் முதுமையில் தம் புத்திரருக்கு அடங்கியிருக்கவேண்டுமென்பது, ஆக 5-வியாசங்கள் அடங்கியிருக்கின்றன.

ஸ்ரீ சாது இரத்தின சற்குரு புத்தகசாலை,
பார்க டவுன் (P. O.), சென்னை.